ஒரு நாள்
கறந்த பால்
வராதபோது திருமதி பாலசந்திரன்
அமுல் மில்க் பவுடர் வாங்க நேர்ந்தது.



# ஆனால்




# இப்போழுது அவர் அமுல் மில்க் பவுடரை தவறாமல் வாங்குகிறார்.

திருமதி பாலசந்திரன் கறந்த பால்தான் பால் பவுடரைவிட மிகவும் சிறந்தது என்று ஒரு காலத்தில் நினைத்திருந்தார். ஆனால் ஒரு நாள் கறந்த பால் கிடைக்கவில்லை. அன்று அமுல் மில்க் பவுடர் உபயோகித்தபோது வியப்புற்றார்! ஒரே ஒரு டின் அமுல் மில்க் பவுடர் அவரது கருத்தையே மாற்றி விட்டது. அது உங்கள் கருத்தையும் மாற்றி விடும்.

ஒரே ஒரு முறை அமுல் மில்க் பவுடர் உபயோகித்தாலே, இது எவ்வளவு சிறந்தது, சௌகரியமானது என்பது தெரிந்து விடும். இது தூய்மையாக, முழுமையாக, புதுமையாக பால் பவுடர் வடிவில் வருகிறது. இது நிமிடங்களில் கரைந்து தயாராகி விடுகிறது. இது மிகவும் வசதியானது. காப்பிக்கும் டீக்கும் அதிக இன்சுவை அளிக்கிறது. இதிலிருந்து சிறந்த கெட்டித் தயிரும், சுவை மிக்க தின்பண்டங்களும் தயாரியுங்கள். க்ரீமுக்குப் பதிலாகப் பயன்படுத்துங்கள். எல்லாமே இன்சுவை கொழிக்கும்.

திருமதி பாலசந்திரன் போன்ற நவீன இல்லத்தரசிகள் இன்று அமுல் மில்க் பவுடரை நம்பி இருப்பதற்குக் காரணங்கள் உண்டு. அமுல் மில்க் பவுடர்—இந்த ஒரே பால்தான் புத்தம் புதிதானது; தூய்மையானது; இன்சுவையுள்ளது; வசதியானது; எளிதில் கிடைப்பது!

## அமுல்
## மில்க் பவுடர்

## வீட்டிலே பால் பண்ணை இருப்பதற்கு ஈடு!



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், ஆனந்த்.

ASP. AMP-27

"எனது சின்னஞ் சிறிய செல்வி துடிதுடிப்பாக ஆரோக்கியமாக மற்றும் சுறுசுறுப்பாக வளர வேண்டும். ஆகையால்தான் அவளுக்கு நாள்தோறும் போர்ன்விடா தருகிறேன்."

OBM/5800 TH



"அவளுடன் ஈடுகொடுக்க இப்போது எனக்கு போர்ன்விடா தேவை!"

"...எங்கள் குடும்பத்தினர் அனைவருமே போர்ன்விடா அருந்துகிறோம். என் கணவர் அதுதான் வேண்டுமென்கிறார். ஏனெனில், போர்ன்விடாவில் மால்ட், பால், குளுகோஸ் மற்றும் சர்க்கரையோடு, கோகோவும் செறிந்துள்ளது. கோகோதான் மிகவும் ஒன்று திரண்ட சக்தியுள்ள உணவு என்கிறார் அவர். தவிர, மற்ற முதன்மையான உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் அதிக அளவில் கோகோ உள்ளது. கோகோ, போர்ன்விடாவுக்கு அதிக சுவையும் தருகிறது. எனது கண்மணிக்கு போர்ன்விடா என்றால் உயிர். அவளது தசைநார்கள், எலும்புகள் மற்றும் முழு வளருவதற்குத் தேவையான எல்லா போஷாக்குச் சத்துகளையும் அது தருகிறது என்பது எனக்குத் தெரியும். அதோடு, மற்ற உணவுப் பானங்களை விட போர்ன்விடா மிகவும் சிக்கனமானது. நான் தினமும் கோப்பை ஒன்றுக்கு 2 தேக்கரண்டி நிறைய போர்ன்விடா சாப்பிடுகிறேன். (மற்ற எல்லா உணவுப் பானங்களைப் போல) என்னுடைய போர்ன்விடா டின் அதிகமான நாட்களுக்கு நீடிக்கிறது. நீங்களும் வாங்கிப் பாருங்கள் தெரியும்".




கேட்பரிஸ்
**போர்ன்விடா**
சக்தி, வலிமை மற்றும் இன்சுவை கிட்டும் உன்னத உணவு பானம்.

ஒவ்வொரு டின்னிலும் அதிக கோப்பை, ஒவ்வொரு கோப்பையிலும் அதிக சுவை!

# கல்கி

ராக்ஷஸ, தை 18
பிப்ரவரி 1, 1976



[இப் பகுதியில் பிரசுரிக்கப் புதுமையான கருத்துக் களைக் கொண்ட புதுக் கவிதைகளை வரவேற் கிறோம். — ஆசிரியர்]

குருபீடம்

நான் உன்னைக்
காதலித்த போதில்
நீ என்னைக்
கைப்பிடிக்காமல் போனது
எவ்வளவு நல்லது பார்.
இல்லாவிட்டால்—
கவிதை எழுதுவதை விட்டு
அரிசிக் கியூவில் அல்லவா
நின்றிருப்பேன்.





ஊ. குமாரன்

# இரண்டும் இரு கண்கள்

**அ**ண்ணல் அமரத்துவம் அடைந்த நாளில் குடியரசுத் தலைவர் முதல் குடிசை வாழ் குடியானவன் வரை சகலரும் அவருக்கு அஞ்சலி செலுத்தப் போகிறோம். கூடவே அவரது கருத்துக்கள் சிலவற்றையும் அசை போடுவோமே! பேராசிரியர் காலின் கிளார்க் மகாத்மாவைத் தாம் சந்தித்து அளவளாவியது பற்றி பின்வருமாறு எழுதுகிறார்:

உரையாடல் நான் சற்றும் எதிர்பாராத முறையில் ஆரம்பமாயிற்று. காந்திஜி என்னைக் கேட்டார்: ''மிஸ்டர் கிளார்க்! இந்திய மக்களிடம் உள்ள குறைபாடு என்ன தெரியுமா?'' ''தெரியாது மகாத்மா!'' என்றேன். அவர் சொன்னார்: ''அவர்கள் சோம்பிக் கிடக்கிறார்கள். உழைக்க மாட்டேனென்கிறார்கள்.''

இது ரொம்பக் கடுமையான விமர்சனமாக எனக்குத் தோன்றியது. இந்திய மக்களுக்காக அவர்கள் தலைவரிடம் பரிந்துரைக்க நான் எண்ணினேன். ''நான் புரிந்துகொண்ட அளவில் இந்திய மக்கள் லோகாயத விஷயங்களைவிட ஆன்மிக அம்சங்களுக்குத்தான் அதிக மதிப்புத் தருகிறார்கள்'' என்றேன். ''அப்படி நம்பாதீர்கள்!'' என்றார் காந்திஜி, அழுத்தம் திருத்தமாக. ''மரத்தடியில் ஒரு மனிதன் அமர்ந்திருப்பதை நீங்கள் பார்க்கலாம். அவன் தியானத்தில் இருப்பதாக எல்லோரும் நினைப்பார்கள், சொல்வார்கள். ஆனால் அவன் உண்மையில் வேலை செய்வதைத் தவிர்த்துக் கொண்டிருக்கிறான்!'' காந்திஜி தொடர்ந்தார்: ''இந்தியத் தொழிலாளி பற்றி நான் கூறினேன். இந்திய வர்த்தகர்கள் பற்றியும் எனக்குக் கெட்ட அபிப்பிராயம்தான். அவர்கள் உற்பத்தியை அதிகரிப்பதை விட வட்டிக்குப் பணம் கொடுப்பதிலும் மார்க்கெட் நிலவரங்களை முன்கூட்டியே ஊகித்துத் திடீர் பணம் பண்ணுவதிலும்தான் அதிகக் கவனம் செலுத்துகிறார்கள்.''

''அப்படியானால் ஒரு விவசாய நாடாக இருக்கும் இந்தியா தொழில் மயமான இந்தியாவாக மாற வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?'' என்று நான் கேட்டேன்.

''ஆமாம்'' என்று அவர் பதில் கூறினார். ''நான் தினம் ராட்டைச் சுற்றுகிறேன். அதை ஒரு புனிதச் சடங்காகவே செய்கிறேன். இதனால் நவீன யந்திரங்களுக்கு நான் விரோதி என்று அர்த்தமாகாது. ஆனால் நான் ஒரு நிபந்தனை விதிப்பேன். தொழிலகங்கள் நாடு முழுவதிலும் பரவலாக வியாபித்திருக்க வேண்டும். அவை பெரிய நகரங்களில் மட்டும் குவிவது ரொம்பக் கெடுதல். இப்படிச் சில நகரங்கள் உருவாவதைத் தவிர்க்க முடியாதிருக்கலாம். ஆனால் நாம் தொழிலகங்கள் ஒரு மையத்தில் குவியாதிருக்க இயன்றதையெல்லாம் செய்ய வேண்டும். இதற்கு இரு முக்கிய காரணங்கள் உண்டு. இந்தியப் பண்பாட்டில் உள்ள நல்ல அம்சங்கள் எல்லாம் கிராமப்புற வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டவை. இந்தப் பண்பாட்டைக் காக்க வேண்டும். இரண்டாவதாக, கிராம மக்கள் நகரவாசிகளுடன் சில அடிப்படைத் தேவைகளுக்காக வியாபாரம் செய்வதை நான் தவறு என்று கூற மாட்டேனென்றாலும் வாழ்க்கைத் தேவைகளுக்குத் தொலைவில் இருக்கும் நகரத்தை நம்பியே கிராமங்கள் வாழ வேண்டும் என்கிற நிலை ஏற்படுவதை என்னால் தாங்கிக் கொள்ளவே முடியாது. உதாரணமாகத் துணிமணிகளை எடுத்துக் கொள்ளுங்கள். கிராமங்களிலேயே அவை தயாராக வேண்டும்.''

ஒரு மாநில கவர்னராக விளங்கிய இரு பக்வாஸா கூறியுள்ளது பற்றி நான் காந்திஜியைக் கேட்டேன். கவர்னர், மதமானது ஒருவரது தனிப்பட்ட விஷயமாக இருக்க வேண்டும் என்று இந்தியன் என்ற எண்ணமே முதலிடம் பெற வேண்டும் என்றும் பேசியிருந்தார்.

காந்திஜி, ''என் பதிலை எழுதிக் கையெழுத்துப் போட்டுத் தரட்டுமா?'' என்று வினவினார். பிறகு பின்வருமாறு எழுதித் தந்தார்:

மதம் தேசியத்துக்குக் கீழ்ப்படிந்தது அல்ல. அதனதன் அரங்கில் ஒன்று மற்றொன்றுக்கு இணையானதே. உலகமே எதிர்த்து வந்தாலும் இரண்டையுமே பாதுகாத்தாக வேண்டும்.

நன்றி : The Joy of Living

கல்கி

மலர் 35

இதழ் 27



தமிழ்த்திரு நாட்டினைப் பெற்ற . எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்


இன்றைய
சித்திரபுத்திரன்
சித்தார்த்த சங்கர்ரே


திடீர்
தலைவர்


நவீன மார்க்கண்டன்
ஆபத்து
திருவள்ளுவர்

# அறிஞர்களின் அறிக்கை

“நாட்டில் உள்ள ஆசார்யர்களை ஒன்று கூட்டுங்கள்'' என்ற விநோபா அடிகள், அவர்களைப் பௌனர் ஆசிரமத்துக்கே தருவித்து ஆலோசிக்கச் செய்தார். அறிக்கையும் பிறந்திருக்கிறது.

நாட்டில் உள்ள நல்லறிஞர்கள் இப்படி அடிக்கடி கூடிக் கலந்துரையாடி, ஆட்சிக்கு ஏகமனதான அறிவுரைகளை வழங்க வேண்டுமென்று விநோபா எண்ணுகிறார். ரொம்ப நல்ல காரியம்தான். ஆனால் அந்த யோசனைகளுக்குச் செவிசாய்க்கப் போகிறவர்கள் யார் என்பதுதான் கேள்வி.

இன்றைக்கென்ன, என்றுமே நாட்டில் உள்ள நல்லறிஞர்கள் தேசநலனுக்கு உகந்த யோசனைகளைக் கூறித்தான் வந்திருக்கிறார்கள். அவர்களுள் ராஜாஜி தலையாய இடம் பெற்றார். இன்றைக்கும் அவரது கருத்துக்கள் ஏற்கப்பட்டால் சஞ்சீவி மூலிகையாக நாட்டின் அரசியலுக்கும் பொருளாதாரத்துக்கும் புத்துயிரூட்டும். இதனை விநோபா அடிகளே கோடிகாட்டியுள்ளார். ஆனால் அவற்றை ஏற்க முடியாமல் தடுப்பது கொள்கைப் பிடிவாதம் அல்லது 'இஸம்' பக்தி.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மக்களின் எண்ணங்களைப் பிரதிபலிப்பார்கள். நல்லறிஞர்களோ மக்களுக்கு எது நல்லது என்று சிந்தித்து அதனைச் சொல்வார்கள். முன்னது மட்டுமிருந்தால் போதாது. பின்னதும் தேவை என்பதற்காகத்தான் மேல்சபை என்ற அமைப்பே நமது ஜனநாயகத்தில் மத்தியிலும் மாநிலங்களிலும் உருவாயிற்று. ஆனால் அதனையும் அரசியல் சதுரங்கமாக்கி விட்டோம் நாம். இன்னும், மந்திரிகள் அரசாங்க உயர் அதிகாரிகளின் அபிப்பிராயங்களைக் கோரிப் பெற்று யோசித்து இறுதி முடிவெடுப்பது என்ற நிலை மாறி அமைச்சர்களின் ஆணையை அதிகாரிகள் ஏற்பது என்ற நிலை பரவலாக ஏற்பட்டு விட்டது.

இவையெல்லாம் மாறி அறிவாற்றலுக்கு உரிய மதிப்புத் தருகிற நாள் உதயமாக வேண்டும். இதற்கே விநோபா பாடுபடுகிறார். தற்போது கூடிய அறிஞர்கள் விடுத்திருக்கும் அறிக்கை அதிர்ச்சி வைத்தியம் போதும் என்கிறது. சகஜ நிலைக்குத் திரும்புவோம்; அதே சமயம நெருக்கடி நிலையால் ஏற்பட்ட சில நற்பயன்களை நீடிக்கச் செய்வோம் என்கிறது. மக்களின் அடிப்படை உரிமைகளைத் திரும்பவும் வழங்குவது, பத்திரிகைச் சுதந்திரங்களைப் பரிபூர்ணமாக்குவது, தேர்தலைக் கூடிய சீக்கிரம் நடத்துவது, அதற்கு முன் தேர்தல் முறையில் தேவையான சீர்திருத்தங்களைச் செய்வது போன்ற பல யோசனைகளைக் கொண்டுள்ள அறிஞர்களின் அறிக்கை அரசின் தாமதமற்ற ஆழ்ந்த பரிசீலனைக்கு உரியது.



# என்ன சேதி?

கணேச சரணம்

ஸ்ரீ கணபதி சச்சிதானந்த சுவாமிகள், சென்னையில் பிப்ரவரி முதல் தேதியிலிருந்து ஒரு வாரம் முகாமிடுகிறார். இங்கு சிறப்பாக இயங்கி வரும் கணபதி சச்சிதானந்த ஞான போத சபையின் புதிய பிரார்த்தனைக் கூடத்தின் (தெ. 2, கச்சேரி சாலை) திறப்பு விழாவில் சுவாமிகள் பங்கேற்று அருள்பாலிக்கிறார். பிப்ரவரி நாலாம் தேதி நடக்கும் இந்த விழாவைத் தொடர்ந்து தினம் மாலை நேரங்களில் பல பிரபல வித்வான்கள் இன்னிசைக் கச்சேரிகள் நிகழ்த்துகிறார்கள். கச்சேரிகளின் முடிவில் சுவாமிகளின் உபதேச உரைகளையும் கேட்கலாம். தினம் காலை நேரத்தில் ஸ்ரீசக்ர பூஜை நடக்கப் போகிறது. மகா கணபதி ஹோமம் பிப்ரவரி 8ந் தேதி கடைசி தினத்தன்று. சுவாமிகளை ஊர்வலமாக அழைத்து வர பக்தர்கள் எண்ணியுள்ளார்கள். தேசத்

ராஜாஜி சிந்தனை

## மதத்தைப் புறக்கணிப்பதல்ல மதச் சார்பின்மை

சிலர் மதத்தையே அழித்துவிட விரும்புகிறார்கள். மதம் முற்றிலும் பயனற்றதாகவும் பொய்யானதாகவும் ஆகிவிடுமானால், பாம்பு சட்டை கழற்றுவது போல் அதை அழித்துவிட வேண்டியது அவசியம்தான். ஆனால் பாம்பு சட்டையை நீக்கி விடுகிறதேயன்றி அது இறந்து போவதில்லை. அது போல் மதத்தில் சேர்ந்த அழுக்குகளை நீக்கிவிட வேண்டுமேயன்றி மதத்தை அழித்துவிட வேண்டியதில்லை.. பாம்புக்கு உயிர் தோலன்று. ஆனால் பாம்பு உயிர் வாழ்வதற்குத் தோல் அவசியம். இந்தியா தேசத்தில் மதத்தை அழித்துவிட்டால் இந்தியா இறந்து போகும் என்பது என் கருத்து. மதத்தை அழித்து இந்தியாவைப் புனருத்தாரணம் செய்ய முடியாது. ஜனங்கள் மதங்களின் பெயர்களால் சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதை நாம் நிறுத்த வேண்டும். அதற்காக நாம் மதத்தையே அழித்துவிட வேண்டிய அவசியமில்லை.

— ''சமூக சீர்திருத்தம்'' என்ற கட்டுரையில்.



# சர்வமங்களத்துக்குத் தர்மலிங்கர்

ஸ்ரீ தர்மலிங்கேஸ்வரர் கோயில் சுமார் 1300 வருடங்களுக்கு முன்பு கட்டப்பட்டுச் சிறப்பாக வழி பாடும் நடந்திருக்கிறது. பிறகு காலப் போக்கில் கோவில் கருவறை வரை பூமியில் புதைந்து புல் மண்டிக் கிடந்தது. ஆர்வம் மிகுந்த பக்தர்கள் இந்தப் பகுதியைச் சீர்செய்து பார்த்தபோழுது கோவில் தெரிந்தது. மிகவும் கவனத்தோடு எந்தக் கல்லும் சேதப்படாமல் எடுத்து, பிறகு அதே கற்களை அதே வரிசையில் வைத்து 'ஸ்ரீ தர்மலிங்கேஸ்வரர் ஆலயத்தை அமைத்திருக்கிறார்கள்.

நங்கைநல்லூர் ஸர்வமங்களா நகர் ஆஸ்திக மக்கள் கோயிலைத் திருப்பி எழுப்பிக் கும்பாபிஷேகம் நடத்துவதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள்.

கட்டத்திட்ட இதுவரை இரண்டு லட்ச ரூபாய் செலவாகியுள்ளது. இதன் கும்பாபிஷேகம் 5-2-76 நடக்கவிருக்கிறது. நங்கைநல்லூர் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி ஆஸ்ரம ஸ்ரீ ராஜகோபால ஸ்வாமிகள் தலைமையில் நடக்கும். எல்லோரும் பெரும் அளவில் இந்த விழாவில் கலந்து கொண்டு இறையருள் பெற வேண்டும்.

---

துக்கு சர்வ மங்களங்களும் சித்திக்க ஆனைமுகத்தானை வேண்டி சுவாமிகளுக்கு வரவேற்புக் கூறுகிறோம்.

**பண்பல்ல**

ஒரு மாநிலத்தின் முதல்வர் மற்றொரு மாநிலத்தின் முதல்வரைக் குறைகூறிப் பேசுவது சரியல்ல என்று பிரும்மானந்த ரெட்டி கூட ஒப்புக் கொள்கிறார். ஆனால் இரு ரே. 'நான் முதல்வர் என்ற முறையில் பேசவில்லை, காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் ஒரு தலைவன் என்கிற முறையில் பேசினேன்' என்று கூறித் தப்பிக்கப் பார்க்கிறார்.

நமது முதல்வர், அப்படியானால் சரி, இதே உரிமை எல்லா மாநிலங்களிலும் அனைவருக்கும் வழங்கப்படுமானால் மகிழ்வேன் என்று பதில் அளித்துள்ளார்.

பொழுது விடிந்தால் பொழுது போனால் தி. மு. க. அரசு பாரபட்சமாக நடந்து கொள்கிறது என்றும் எதிர்க் கட்சிகள் இங்கு சுதந்திரமாக இயங்க அனுமதிக்கப்படவில்லை என்றும் கூக்குரல் எழுப்புகிறவர்கள் மற்ற மாநிலங்களுக்குச் சற்றுச் சென்று திரும்பட்டும்.

# வட்ட மேஜை

தலையங்கம் கண்டேன்.

தமிழக அரசின் நடவடிக்கைகளைக் கடந்த பத்து ஆண்டுகளாகக் கவனித்து வரும் மத்திய அரசு, தார்மீகப் பண்புடன் மேலும் ஓராண்டு காலம் அதனை இயங்க விடுவதுதான் மத்திய அரசின் கௌரவத்தைக் காக்கும் என்று கட்டியுள்ளதை வரவேற்கிறேன். ராஜாஜியின் பாதையின்படி நடக்க அரசியல் சட்டம் கற்பகத் தருவாக இருக்கிறது என்று தலையங்கம் தீட்டிய தாங்கள் ஆச்சார்ய பாவேயின் கருத்தையும் அதே பக்கத்தில் வெளியிட்டிருப்பது, தலையங்கத்தின் பலத்தை இரட்டிப்பாக்குகிறது. பாராட்டுக்கள்.

சென்னை — 5
10–1–76 டி.எஸ்.ராஜகோபாலன்

வங்காளி மொழியில் 'டா' மரியாதை என்பது போல எழுதி உள்ளீர்கள். பாப்புலர் மியூசிக் சுருக்கமாய் பாப் மியூசிக் என்று அழைக்கப்படுவது போல 'தாதா' (dhada) என்பது சுருக்கமாய் பர்மன் தாதா என்பதற்குப் பதில் 'பர்மன்தா', 'ரிஷிகேஷ்தா' என்று அழைக்கப்படுகிறது. 'தாத்தா'விற்கும் 'டாட்டா'விற்குமுள்ள வேறுபாடு கொண்டவை. யாரோ சொன்னது போல் சுரண்டிக்கும் பாதாளக் கரண்டிக்கும் உள்ள வேற்றுமை என்றுகூடக் கூறலாம்.

பொன்மலை என். பாலு
20-1-76

தலையங்கம் பார்த்தேன். தந்திகள் அனுப்புமாறு தி.மு.க மகாநாடு கோரிக்கை விடுத்தது முக்கியத்துவம் பெறுவதாகக் குறிப்பிட்டுள்ளீர்கள். மாநில சட்டசபைக்கும் நாடாளு மன்றத்துக்கும் ஒரே சமயத்தில் தேர்தல் நடத்தக் கோருகிறது தி.மு.க.. முதலில் தி. மு. க. அரசு தன் அதிகாரத்துக்குட்பட்ட ஸ்தல ஸ்தாபனத் தேர்தல்களை நடத்தி வழிகாட்ட முன்வரலாமே?

சென்னை
23-1-76 சந்திரன்

# வையம் பரவிய வைதிக மதம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

5

தாய்லாந்துக்காரர்களுக்கு இப்போது பாவை பாராயணம் அடியோடு விட்டுப் போய்விட்டது. தமிழ் மொழித் தொடர்பே அவர்களுக்கு இல்லை. என்றாலும், அவர்கள் தநுர்மாசத்தில் சிவ வேஷம் போட்டுக் கொண்டவனுக்காக நடத்துகிற டோலோத்ஸவத்துக்கு ''ட்ரியம்பாவை, ட்ரிபாவை'' என்ற பெயர் மட்டும் இருக்கிறது. ஊஞ்சல் ஆடுகிறவருக்குப் பக்கத்திலே சிலர் நின்றுகொண்டு, அவர்களுக்கே அர்த்தம் தெரியாத மந்திரங்களைக் 'கடபுடா'வென்று சொல்கிறார்களாம். ஒவ்வொரு மந்திரமும் ''ட்ரியெம்பாவா'' என்றே முடிகிறதாம்.

சரித்திர காலத்துக்குள் இப்படிப்பட்ட மாறுபாடுகள் உண்டானால், மூவாயிரம் நாலாயிரம் வருஷங்களுக்கு முற்பட்ட சமாசாரங்கள் வெளி நாடுகளில் எத்தனையோ திரிந்தும் மாறியும்தானே இருக்கும்? இத்தனை மாறினாலும் எல்லாவற்றிலும் வேத சம்பிரதாயத்தின் அடையாளங்கள் 'இதோ இருக்கிறோம்' என்று தலை நீட்டுகின்றன.

மெக்ஸிகோ பழங்குடிகளுக்கு 'ஆஸ்டிக்' (Aztec) என்றே பெயர்; இது 'ஆஸ்திக' என்பதின் திரிபுதான். அவர்கள் 'ராம ஸீதா' என்று உத்சவம் நடத்துகிறார்கள். அங்கே வெட்டுகிற இடமெல்லாம் விநாயகர் விக்கிரகம் அகப்படுகிறது. பெரு தேசத்தில் சரியாக நம் விஷுவின் போது சூரிய பூஜை செய்கிற குடிகள் இருக்கிறார்கள். 'இனன்' என்பது சூரியன் பெயர். சூரிய குலத்தில் பிறந்த ராமனை இனகுல திலகன் என்கிறோம். மேலே சொன்ன பெரு நாட்டுச் சூரிய பூஜைக்காரர்களுக்கு ''இன்காஸ்'' என்றே பேர். ஆஸ்திரேலியப் பழங்குடிகள் நெற்றியிலே மூன்றாவது கண் வரைந்து கொண்டு ''சிவா'' ஆட்டம் என்று ஆடுகிறார்கள்.

வெளி தேசங்களுக்குப் படை யெடுப்பதோ, அவற்றுடன் கடல் வாணிபம் வைத்துக்கொள்வதோ எப்போது என்றால் அந்தத் தேசங்களில் ஏற்கனவே ஒன்று நல்ல கலாசாரமாவது இருக்க வேண்டும், அல்லது அவற்றில் நம் தேசத்தை விட ஜாஸ்தியான இயற்கைச் செழிப்பு, தங்கம் வெள்ளி முதலான கநி வர்க்கங்கள் இருக்க வேண்டும். மெக்ஸிகோ, பெரு, ஆஸ்திரேலியா போன்ற தூர தூர தேசங்களுக்குச் சரித்திர காலத்துக்கு முந்தியே நம் தேசத்திலிருந்து போய்ப் படையெடுத்து ராஜ்யம் ஸ்தாபிக்கும்படியாக (colonise பண்ணும்படியாக) எந்தச் சிறப்பும் இல்லை. அந்தப் பிராசீன காலத்தில் இந்தியாவில்தான் பாலும் தேனும் பெருக்கெடுத்தோடின. எனவே இப்படிப்பட்ட காலத்திலேயே அந்தக் கண்காணாத தேசங்களின் காட்டுக் குடிகளுடைய மதத்தில் கூட வைதிக அம்சங்கள் ஊறிப் போயிருந்தன என்றால் என்ன அர்த்தம்? அத்தனை காலத்துக்கு முந்தி, நாகரிக வாழ்க்கையே உருவாகாத இத் தூர தேசங்களுக்கு இந்தியாவிலிருந்து படையெடுத்தோ, வியாபாரத்துக்காகவோ போய் நம் நாகரிகத்தைப் பரப்பினார்கள் என்றால் அது பொருத்தமாகவே இல்லையே! அதனால்தான், ''**இங்கிருந்து கொண்டு போய் அங்கு புகுத்தவில்லை.** ஆதியில் லோகம் முழுக்கவே வேத மதம்தான் இருந்திருக்க வேண்டும்'' என்கிறேன்.

வருஷம், மாசம், வாரம் என்று லோகம் முழுவதிலும் அநேகமாக எல்லாத் தேசங்களிலும் ஒரே மாதிரியாகப் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்பிருந்து வைத்துக்கொண்டிருப்பதுகூட, எல்லோரும் ஒன்றாக இருந்ததால்தான் என்று தோன்றுகிறது. இதிலே இப்போதுள்ள (ரோம சாம்ராஜ்யத்தில் நடைமுறைக்கு வந்த) இங்கிலீஷ் முறைக் காலண்டருக்கும், நம் பஞ்சாங்கத்துக்கும் ரொம்ப ஒற்றுமை இருக்கிறது. இப்போது 'யுகாதி' என்று சாந்திரமானப்படி வருஷத்தை ஆரம்பிக்கிற எல்லோருக்கும் மார்ச் மாதத்தில் வருஷம் பிறக்கிறது. இங்கிலீஷ் காலண்டர்படி ஜனவரியில் வருஷம் பிறந்தாலும் ஆதியில் அவர்களும் மார்ச்சிலிருந்துதான் புத்தாண்டு தொடங்கியிருக்கிறார்கள். இதனால்தான் மார்ச்சிலிருந்து ஏழாவது (ஸப்த) மாதம் செப்டம்பர் என்றும், எட்டாவது (அஷ்ட) அக்டோபர் என்றும் ஒன்பதாவது (நவ) மாதம் நவம்பர் என்றும், பத்தாவது (தச) மாதம் டிசம்பர் என்றும் பேர் பெற்றுள்ளன. இதற்கு எதிர்வெட்டாக, நம் நாட்டிலேயே ஜனவரியை முதல் மாதமாக வைத்துக் கொள்கிற ஒரு வழக்கம் இருந்திருக்கிறது. இதனால்தான் ஜனவரி வருகிற மார்கழி மாசத்துக்கே ஆக்ரஹாயணம் என்று ஒரு பெயர் இருக்கிறது. உத்தராயணம், தக்ஷிணாயனம் என்பது போல் 'அயனம்' என்றால் காலப் பிரிவினை. 'அக்ரம்'' என்றால் 'முதல்' என்று அர்த்தம். முதலில் வரும் மாசம்தான் ஆக்ரஹாயணம்.

வருஷம், மாசம் என்ற பிரிவினை லோகத்தில் அநேக தேசங்களில் ஒரே மாதிரி இருப்பதற்காவது காரணம் சொல்லலாம். சூரியனை உலகம் சுற்றி வருவதற்கு ஆகிற காலம் தான் ஒரு வருஷம்; ஒவ்வொரு ராசியிலும் சூரியன் பிரவேசிக்கிற நாள் மாசப் பிறப்பு என்றிப்படி அந்தந்தத் தேசத்திலும் வைத்துக்கொண்டார்கள் என்று சொல்லலாம்.

(தொடரும்)

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

# நகர் வலம்:



வர்த்தமானேசுவரர்



# வங்கத்தின் பகுதி;

கோபால் கோவிந்த முகோபாத்தியாயர் பார்ப்பதற்கு எளியவர். ஆனால் கல்வி கேள்விகளில் சிறந்தவர். சென்னையில் ஷண்மத மகாநாடு நடந்தபொழுது அற்புதமாக உரையாற்றியவர்.

ஸ்ரீ முகோபாத்தியாயர் என்னை வற்புறுத்தி அழைத்த ஊர் பர்த்வான். அந்தப் பெயரைக் கேட்டதுமே வரலாறு சமைத்த இரு பெரும் புள்ளிகள் என் மனத்தில் நிழலாடினார்கள். ஒன்று ஈசுவரசந்திர வித்யாசாகர். இன்னொன்று ஒருவனைக் காதலித்து இன்னொருவனை மணந்து கொண்டாளே மேஹருன்னிஸா என்னும் நூர்ஜஹான், அவளது கணவன் ஷேர் அஃப்கன்.

வித்யாசாகரின் பிறந்த ஊர் மிதினாபூர் என்றாலும் இந்த ஊர் ரயில்வே ஸ்டேஷனில் தான் நவநாகரிக உடை அணிந்து ஒயிலாக வந்த ஓர் இளைஞனுக்குச் செயற் கல்வி மூலம் அறிவுரை வழங்கினார். கனமே இல்லாத சின்னஞ் சிறு பெட்டியைத் தூக்க மாட்டாமல் தூக்கிக்கொண்டு, அப்படிப் பெட்டி தூக்குவது தனக்குக் கௌரவக் குறைவு என்ற எண்ணச் சுமையையும் ஏந்திக்கொண்டு 'கூலி கூலி' என்று கூலி அழைத்தான் அவன். பிளாட்பாரத்தில் கால் வைத்ததும் வைக்காததுமாக. அந்த நாட்களில் இத்தனை கூலிகள் எங்கே இருந்தார்கள்? எனவே, எளிய உடையிலிருந்த 'கல்விக் கடல்' அவன் படும் அவஸ்தையைக் கண்டு இரங்கிக் கைகொடுத்து உதவியது. அவன் கூலி கொடுக்கப் போன போதுதான், அவனுக்கு அவர் யார் என்று தெரிய வந்தது. மீனாட்சி சுந்தரேசுவரராவது பிட்டுக்கு மண் சுமந்தார்; வித்தியாசாகர் கூலிக்குப் பெட்டி தூக்கவில்லை என்பதை அறிந்தபொழுது கூனிக் குறுகிப்போனான். அப்படி ஒரு தர்மசங்கடம் நமக்கும் ஏற்படக் கூடாதே என்று முன்னெச்சரிக்கையாக நான் கையை வீசிக் கொண்டுதான் இறங்கினேன். கூலிகள் பெருத்துவிட்ட இந்த நாட்களில் என்னைக் கண்டு அவர்களுக்கு ஏமாற்றம்!

ஸ்டேஷனுக்கு வெளியே வந்து ஓர் ஆட்டோ பிடித்தேன். ஸ்ரீ முகோபாத்தியாயரின் வீடு தேடிப் போகும் வழியில் எல்லாம் காணாத காட்சி ஒன்றைக் கண்டுகொண்டே சென்றேன். இந்த ஊரில் வீட்டுக்கு வீடு குளம் இருக்கிறதே. இதென்ன அதிசயம்! சின்னஞ் சிறு குடிசையே ஆனாலும், அதற்கேற்ப ஒரு குளம்; விரலுக்குத் தகுந்த வீக்கம் என்பது போல்!

முகோபாத்தியாயரைச் சந்தித்ததும் எனது அந்த அதிசயம் முதல் கேள்வியாக உருவெடுத்தது. ''ஊருக்குப் பொதுவாக இரண்டொரு குளங்கள் இருந்தால் போதாதோ? எதற்காக இப்படி வீட்டுக்கு வீடு குளம்?'' என்றேன்.

''ஓ, அதுவா? குளிக்க, குடிக்க மட்டும் இந்தக் குளங்கள் உபயோகப்படவில்லை. மீன் வளர்ப்புக்கும் பயன்படுகின்றன!'' என்று

சியாம் சாகர்



ஷேர் அஃப்கன் சமாதி



கூறி அவர் புன்னகை செய்தபொழுது, எனக்குப் பட்டென்று அந்த விஷயம் விளங்கியது. 'நமது மாநிலத்தில் வீட்டுக்கு வீடு வாழைக் கொல்லை, கறிகாய்த்தோட்டம் இருப்பது போல, இவர்கள் நீர் வாழைக்காய்த் தோட்டம் போடுகிறார்கள்!'

''இந்த ஊருக்குப் பர்த்வான் என்று பெயர் வரக் காரணம்?'' என்றேன்.

''பர்த்வான் என்பது திரிபுச் சொல். சரியான சொல் வர்த்தமான். வரலாற்றுப் பெருமை ஏற்றுவதற்காக மகாவீர வர்த்தமானர் பெயரை இணைத்துக் கொள்கிறார்கள். என்னைக் கேட்டால் அதற்கு அத்தனை ஆதாரம் இருப்பதாகத் தெரியவில்லை. அருகிலேயே தாமோதர நதியும் அணையும் இருந்தாலும், இங்கே ஓடும் நதிக்கு பட்வான் என்று பெயர். வர்த்தமான என்னும் சொல்தான் இப்படி மருவி வந்திருப்பதாகத் தோன்றுகிறது.

தன் கணவனைக் கொன்றவனைக் 'கூட இருந்தே கொல்லும் வியாதி'யென நூர்ஜஹான் எப்படிப் பழி தீர்த்தாள் என்பது வரலாறு கூறும் கதை. அதை அறிய வேண்டும் என்றால் புகழ் பெற்ற வங்க நாடகாசிரியர் த்விஜேந்திரலால் ராயின் 'நூர்ஜஹான்' நாடகத்தைப் படிக்கலாம்.

''அவன் நினைவுச் சின்னம் ஏதாவது இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''இருக்கிறது. டோம்ப்! பார்த்து வாருங்கள்!'' என்றவர் பார்க்க வேண்டிய மற்ற இடங்களுக்கும் குறிப்புக் கொடுத்தார்.

இங்கு அதிகப்படியாகப் பழக்கத்தில் உள்ள வாகன வசதி சைக்கிள் ரிக்ஷாதான். அதில் ஏறிக்கொண்டு கர்ஜன் கேட்டுக்கு விடச் சொன்னேன். லார்ட் கர்ஜனுக்கு வரவேற்பு அளித்ததன் நினைவாக இங்கு அரசாட்சி புரிந்த பஞ்சாபிய மன்னர் விஜய் சாந்த் மெஹ்தாப் கட்டிய வாயில் ஆகும். எத்தனையோ வளைவுகளையும் கேட்டுகளையும் பார்த்தவர்களுக்கு அது புதுமையாக இராது.

# லிங்கங்கள் மிகுதி!



சர்வமங்களா தேவி ஆலயம்



## ரா. வீழிநாதன்

ஆர்.நூப் பாசனத்தில் அமோக விளைச்சல் காண்பதனால் இந்தப் பெயர் வந்திருக்கலாம். 'வங்காளத்தின் தான்யக் களஞ்சியம்' என்றே வர்த்தமான் மாவட்டம் அழைக்கப்படுகிறது.''

அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுதே என் மனத் திரையில் நிழலாடிய ஷேர் அஃப்கன் உயிர்த்து வந்தான்.

தம் மகன் சலீம் மெஹருன்னிஸாவை மணக்கக் கூடாது என்று அக்பர் செய்த சூழ்ச்சியால் அவள் ஷேர் அஃப்கனுக்கு மனைவியானாள். ஷேர் அஃப்கனும் பர்த்வானின் சுபேதார் ஆக்கப்பட்டு பர்த்வான் வந்து சேர்ந்தான். கணவனுக்கு உண்மையானவளாக நடக்கத் தீர்மானித்த அவளுக்கு ஒரு சோதனை! அக்பர் இறந்தாலும் ஸலீமின் காதல் இறக்கவில்லை. மெஹர் உன்னிஸாவை அடைய வேண்டும் என்பதற்காக அவன் வஞ்சகமாக ஷேர் அஃப்கனின் உயிரைக் குடித்து விட்டான். ஸலீம் ஜஹாங்கீர் ஆனதும், மெஹருன்னிஸா நூர்ஜஹான் ஆனதும்,

ஆனால் ஒரு புதுமை. கட்டியவர் பெயராலேயே இப்பொழுது விஜய தோரண் என்று வழங்குகிறது.

வங்காள மாநிலமே சக்தி வழிபாட்டுக்குப் பெயர் போனது. இந்த ஊரை வாழவைக்கும் தெய்வத்துக்கு சர்வ மங்களா தேவி என்று பெயர். பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த இந்தக் கோயில் கலை வேலைப்பாடுகள் கொண்டது இல்லை என்றாலும், பதினெட்டுக் கரங்களோடு எருமையைக் காலடியில் கொண்ட சர்வ மங்களா தேவி கருங் கல்லால் ஆனவள். ஆனால் மிகமிக இளகிய நெஞ்சம் கொண்டவள். தன் பெயருக்கேற்ப, ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்துவர் என்ற பாகுபாடின்றி எல்லா மதத்தினருக்கும் அருள் பாலித்து வருகிறாள். நாகூர் ஆண்டவர், நாகை வேளாங்கண்ணி போல! அந்த நாட்களில் வர்த்தமான் ராஜ்யத்துக்குப் புகழ் சேர்த்த சித்ரஸேன மன்னரின் கனவில் தோன்றி, குளத்தில் கிடக்கும் தன்னை எடுத்துப் பிரதிஷ்டை செய்யச் சொன்னவளாம் அன்னை சர்வ மங்களா.

''இங்கே ஆலம் கஞ்சிலே ஒரு பெரிய சிவலிங்கம் கிடைத்திருக்கிறது. அதற்கு வர்த்த



''சார்! தயவு செய்து டெஸ்பாடச் ஜோர்க்கை ஒரு மணி நேரம் பர்மிஷன் தந்து அனுப்புங்களேன். ரிஜிஸ்தர் ஆபீஸ் வரை போய் வந்து விடுவோம்.''

---

மானேகவரர் என்று பெயர் வைத்திருக்கிறார்கள்!'' என்றான் ரிக்ஷாக்காரன்.

'வந்ததுதான் வந்தோம்; வர்த்தமானேகவரரையும் தரிசனம் செய்து கொள்வோமே!' என்று ரிக்ஷாவை அங்கு விடச் சொன்னேன்.

சந்திலும் பொந்திலும் புகுந்து புறப்பட வேண்டியிருந்தது. கப்பி போடாத மண் சாலையிலும் போக வேண்டியிருந்தது. போகும் போது, ''பீர் பஹ்ரம் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டான்.

''பீர் பஹ்ரமா? என்ன அது?''

''இங்கேதான் ஷேர் அப்கன் சமாதி இருக்கிறது!'' என்றான்.

அவன் நிறுத்திய இடம் மிகப் பழமையான இடம். உள்ளே போய்ப் பார்த்தால் பக்கத்தில் பக்கத்தில் இரண்டு சமாதிகள் இருந்தன. மெஹருன்னிஸாதான் ஷேர் அப்கனோடு உடன்கட்டை ஏறாமல், நூர்ஜஹானாக ஜஹாங்கீரையே பழி வாங்கப் போய் விட்டாளே! அப்படி இருக்க இங்கே இரட்டைச் சமாதி ஏன் என்று எண்ணியவாறே அருகில் சென்றேன். சலவைக் கல்லில் ஒன்றின் மேல் ஷேர் அப்கனைப் பற்றியும், இன்னொன்றின் மேல் குதுபுத்தீனைப் பற்றியும் பொறிக்கப் பட்டிருந்தது. இருவரும் அடக்கமான ஆண்டு கி. பி. 1610 ஆகும்.

குருவிக் கூட்டைக் கலைப்பது போல் இன்பமான ஷேர் அப்கனின் தாம்பத்திய வாழ்க்கையைக் குலைக்க ஜஹாங்கீர் ஆணையின் பேரில் முயன்றான். அவனுக்குக் கையாளாகி, ஷேர் அப்கனின் உயிருக்கு உலை வைத்தான் குதுபுத்தீன் என்பவன். அவனையும் அருகிலேயே புதைத்திருக்கிறார்கள்! நன்மையையும் தீமையையும் ஏககாலத்தில் நினைவு படுத்துகிறாற்போன்ற அந்த இடத்தில் இந்த இரண்டு கல்லறைகள் மட்டும் அல்ல; எண்ணற்ற கல்லறைகள் இருந்தன. அத்தனையும் வீரம் விளைத்தவர்கள் உறங்கும் இடம்!

உயர்ந்தோர், தாழ்ந்தோர், நல்லோர், தீயோர் என்ற பாகுபாட்டினைச் சம நோக்கோடு குழி தோண்டிப் புதைக்கும் இடம் புதைகாடு ஒன்றுதானே!

அங்கிருந்து ஆலம்கஞ்சுக்குப் போனேன், வர்த்தமானேகவரரைப் பார்க்க! 1972ம் ஆண்டு ஜூன், ஜூலை மாதங்களில் வயலை உழுதபொழுது சாருசந்திர தே என்பவருக்குச் சொந்தமான இடத்திலிருந்து இவர் கிடைத்திருக்கிறார். நாற்புறமும் திறந்த குடிசைப் பந்தலில் வாசம். நிலச் சொந்தக்காரர் இவருக்கும் கூடத் தம் சொந்த வயல்களிலேயே ஒரு குளம் வெட்டிக் கொடுத்திருக்கிறார்.

வர்த்தமானேகவரர் மிகப் பெரியவர். ஒரே கல்லில் ஆவுடையாரும் லிங்கமுமாகக் கம்பீரத் தோற்றம் அளிப்பவர்.

இவரைத் தரிசித்த உடனே நூற்றெட்டுச் சிவன் கோவில்கள் ஒரே இடத்தில் பர்த்வானில் இருப்பதாக ஸ்ரீ முகோபாத்தியாயா கூறியது நினைவுக்கு வந்தது. அவற்றைக் காண இந்தக் கோடிக்கு அந்தக் கோடி நகர்வலம் புறப்பட்டேன்.

திலக் சாந்த் என்ற மன்னரின் இளைய ராணி பிஷன் குமாரி. பிறக்காதா என்று தவம் கிடந்து பிறந்த பிள்ளை தேஜ் சாந்த். பிறந்த சில ஆண்டுகளுக்குள்ளேயே தகப்பன் தலையை உருட்டி விட்டான். பெண் வளர்த்த பிள்ளை என்ற அவப் பெயரோடு தறிதலையாகத் திரிந்தான். நல்ல பழக்கங்கள் என்ற பேச்சுக்கே இடம் வைக்காமல் வாழ்ந்தான். அவனை நல்லபடி ஆளாக்கி ராஜ்ய பாரத்தை ஒப்படைக்க நினைத்த ராணி பிஷன் குமாரிக்குப் பெருத்த ஏமாற்றம்! என்றாலும் பிள்ளை திருந்திவிடலாகாதா, நல்ல பெயர் எடுக்கலாகாதா என்ற ஆசையில் சிவபெருமானுக்கு நூற்றெட்டுக் கோவில்கள் எடுப்பதாக வேண்டிக் கொண்டாள்.

அவள் வேண்டுகோளுக்கு ஆண்டவன் செவி சாய்த்திருக்க வேண்டும் என்பதற்கு அத்தாட்சியாக நூற்றெட்டுச் சிவன் கோவில்கள் நவாப்ஹாட் என்னும் இடத்தில் காட்சி தருகின்றன. நீண்ட சதுரத்தில் நாற்புறமும் நூற்றெட்டுக் கோவில்கள் எதிரும் புதிருமாகப் பார்க்கிறாற்போல் ஒரு வரிசையில் கட்டப்பட்டுள்ளன. நடுவிலே இரட்டைக் குளங்கள், சிவபெருமானின் அபிஷேக ஆராதனைகளுக்காக. ரம்யமான சூழல்!

இன்றைய பர்த்வானுக்கு ஏற்றம் தருவது பர்த்வான் பல்கலைக் கழகம். பர்த்வான் அரச பரம்பரையினர் தமது நிலபுலன்களை இக்கல்விக் கூடத்துக்கு நன்கொடையாக அளித்துள்ளார்கள். நாற்புறமும் தண்மை வழங்கும் நீரோடையும் நிழல் தரும் மரங்களும் சூழக் கல்வி கற்கத் தூண்டும் சூழலாகத் திகழ்கிறது பல்கலைக் கழகம்.

ஆனால், நான் பர்த்வான் சென்றிருந்த பொழுது நகரில் காவல் படையினரின் நடமாட்டம் அதிகம் இருந்தது. விசாரித்ததில் மாணவர்கள் பரீட்சை எழுதுவதைப் பாவமாக நினைக்கிறார்கள் என்று பேசிக் கொண்டார்கள்! அதனால்தானோ என்னவோ, இனிப்புக்குப் பெயர் போன பர்த்வான் பூந்தியுமே எனக்குக் கசந்தது!

---



பம்பாய் தாஜ்மகல் ஓட்டலில் வேலை செய்யும் சாகர் என்பவரின் பொழுதுபோக்கு தீப்பெட்டி லேபிள்கள் சேகரிப்பது. அவர் சேகரித்த லேபிள்களில் மகாத்மா காந்தி படம் போட்ட ஒன்று இருக்கிறது. இது ஜப்பானிய தீப்பெட்டியின் லேபிள்!

தாஜ் சஞ்சிகை — பாபு

# சேரமான் காதலி

## கண்ணதாசன்



### முன்கதைச் சுருக்கம்

கி. பி. 754-ம் ஆண்டில் இரண்டாம் சேரமான் பெருமாள் சேர நாட்டின் தலைநகரான வஞ்சியில் ஆட்சி செலுத்தி வந்த போது மகாவிஷ்ணு பக்தரான அவருக்கு, விஷ்ணு தலங்களை யெல்லாம் தரிசிக்கும் பேரவாவும், அதன் காரணமாக முடி துறக்கும் எண்ணமும் ஏற்படவே, தம் குமாரன் மார்த்தாண்ட வர்மனுக்குத் திருமுடி புனைந்துவிட்டு, தலயாத்திரை செய்யப் புறப்பட்டார்.

மன்னரின் மைத்துனன் மகனான பாஸ்கர ரவிவர்மன், கைப் பிடித்த மனைவியை லட்சியம் செய்யாமல் யூதர் குலத்து அழகி யூஜியானாவிடம் மனம் பறிகொடுத்து அவளைத் தினந்தோறும் இரவு நேரங்களில் சந்தித்து வந்தான்; அவளும் இவனைக் கண்டு மகிழ்ந்து தோடு நெகிழ்ந்தும் போனாள். மன்னர் முடி துறப்பது குறித்து ரவி வர்மன் வெளிப் பார்வைக்குக் கண்ணீர் வடித்தாலும் ஆட்சியைக் கைப்பற்றும் ஆவலில் ரகசிய நடவடிக்கைகளில் ஈடுபடலானான். அவற்றுக்குச் சாதகமாக ஓர் ஓலையைத் தயாரித்து அதில் மன்னர் சேரமான் பெருமாளின் கைச்சாத்துப் பெறத் தன் மனைவி பத்மாவதியையே ரகசியத் தூதாக அனுப்பத் தீர்மானித்து அதற்காக அவளைச் சரிக்கட்டித் தன் வழிக்குக் கொண்டு வர முயன்றான். பத்மாவதி, இதுநாள் வரையில் தன்னைப் புறக்கணித்து வந்த தன் கணவனின் சரச சல்லாபங்களைக் கண்டு அயர்ந்து ஆனந்த பரவசம் அடைந்தாளானாலும், தாயினும் சாலப் பரிந்து தன்னை வளர்த்துவரும் மன்னர் சேரமான் பெருமாளுக்கே நம்பிக்கைத் துரோகம் செய்ய மனம் இடம் கொடாமல் தவித்தாள்.

### அத்தியாயம் 10

## இதயத்தில் அவள்



இரவு வரை பத்மாவதி வீடு திரும்பவில்லை என்றதும் ரவிவர்மன் மனத்தில் சந்தேகம் எழத் தொடங்கிற்று. 'மன்னவர் ஓலையைப் பார்த்திருக்கக் கூடும். பத்மாவதியைக் கடுமையாக ஏசியிருக்கக்கூடும். பயம் மிகுந்த நிலையில் பத்மாவதி கோதையுடனே தங்கியிருக்கக் கூடும்' என்றெல்லாம எண்ணத் தலைப்பட்டான்.

மூத்த தாவளி அவனைச் சாப்பிட அழைத்த போது அவன் பொறுமை இழந்திருந்தான்.

''எனக்குப் பசி இல்லை'' என்று சொல்லி விட்டுச் சால்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டு யூஜியானாவின் இல்லம் நோக்கி நடந்தான்.

நாலைந்து இரவுகளாக அவனைக் காணாத யூஜியானா அந்த இரவுக்கு நன்றி செலுத்தினாள். அவனை அமர வைத்தாள். அலங்காரம் செய்து கொண்டாள். முதல் இரவுக்குச் செல்லும் பதுமைபோல் தன் முகத்தை வசிகரப் படுத்திக் கொண்டாள். அவன் காலடியிலே வந்து அமர்ந்தாள்.

இத்தனை ஆத்திரத்திலும், குழப்பத்திலும் இருந்தால் தெய்வப் பாவையே எதிரில் வந்து நின்றாலும் காதல் பிறக்காது. மனத்தின் நிம்மதியே மயக்கத்தை

ஒருமுகப்படுத்துகிறது. உடலைச் செய லற்றதாக்கிவிட்டு ரவிவர்மனின் மனம் எங்கெங்கோ பறந்து கொண்டிருந்தது.

அவள் அவனது கால்களில் சாய்ந்த படி முழங்கால்களின் மீது இரண்டு கை களையும் மடித்து வைத்துக் கொண்டு யூத மொழியில் பாடத் தொடங்கினாள்:

'தேவலோகப் பறவைக்குத் தாக மெடுக்கிறது.

'திரும்பிய பக்கமெல்லாம் தண் ணீர் இருக்கிறது.

'குடிக்க முடியாமல் ஏதோ குறுக்கே நிற்கிறது.

'எந்த ரகசியத்தில் தேவன் சுகங் களை எல்லாம் வைத்திருக்கிறானோ. அந்த ரகசியத்தின் கத வுகள் அடைபட்டே கிடக்கின்றன.

'என் தலைவனின் மௌனம் எனக்குப் புரிய வில்லை.



'விரிக்கப்பட்ட பஞ்சணையின் மீது தூவப்பட்ட மலர்கள் அங்கேயே மலர்ந்தது போல் காட்சி அளிக்கின் றன.

'பஞ்சணை விரிக்கப்பட்டது அந்த மலர்கள் தூங்குவதற்காக அல்ல.

'ஒரு மலரும் இன்னொரு மலரும் ரகசியங்களைப் பரிமாறிக் கொள்ள முடியும் என்றால், அதைப் பார்த்தா வது நான் ஆத்ம திருப்தி அடைவேன்.

'போர்க் களத்தில் வாட்கள் மோதுகின்ற ஓசையையே கேட்டுப் பழகிப் போன தலைவனுக்கு, போகக் களத்தில் இதழ்கள் மோதுகின்ற ஆசை பிடிக்காதா?

'இரண்டு விளக்குகளும் பக்கம் பக்கமாகவே எரிகின்றன; ஒன்றை யொன்று தழுவக் கூடாதா?

'ஆம்; தேவலோகப் பறவைக்குத் தாகம் எடுக்கிறது.

'ஜெருசலத்துக் கிணற்றில் இனிமையான நீர் சுரந்து கொண் டிருக்கிறது.

'யூத வம்சத்து மேனி அதனால் அழகுபடுத்தப்படுகிறது.

'அழகுக்குக்கூட வயதாகிக் கொண் டிருக்கிறதே!

'தலைவனுக்கும் தலைவிக்கும் தாய் மொழிகள் வேறு வேறு.

'அவனது தாய்மொழி மௌனம்;

'அவளது தாய்மொழி மயக்கம்.

'என்ன செய்வது!

'தேவலோகப் பறவைக்குத் தாகம் எடுக்கிறது.'

—இப்படிப் பாடிக் கொண்டே தனது மெல்லிய கரங்களால் அவனது கால்களைப் பிடித்துவிட் டாள் யூஜியானா. சமயங்களில் முழங் கால்களில் முத்தமிட் டாள். விரக தாபத்தின் ஆற்றாமை யால் அவள் கொஞ்சம் துணிச்சலா கவே காட்சி அளித்தாள்.

எழுந்து அவனது தலையை வாரிக் கொடுத்தாள்; கன்னங்களைத் தடவிக் கொடுத்தாள். இதுவரையில் அவனிடம் நடந்து கொள்ளாத வகையில் நடந்து கொண்டாள். ஆனால், அந்தப் புதிய அனுபவத்தைக்கூட உணர முடியாத நிலையில் அவன் இருந்தான்.

அவன் மனத்தில் நாராயண நம்பூதிரி யின் முகமும், மார்த்தாண்டவர்மனின் முகமுமே மாறிமாறிக் காட்சி அளித்தன. பத்மாவதியைப் பற்றிக்கூட அவன் அதி கம் சிந்திக்கவில்லை. ஓலையில் அவள் கைச் சாத்து வாங்கியிருக்க மாட்டாள் என் பதை மட்டும்அவனால் உணர முடிந்தது.



''என்ன யோசித்துக் கொண்டே யிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் பூஜியானா.

''ம்... ஒன்றுமில்லை'' என்றான் அவன்.

''விழா மண்டபத்தில் நீங்கள் நின்றுகொண்டே யிருந்தது எனக்கு எப்படியோ இருந்தது'' என்றாள் அவள்.

''பரவாயில்லை...'' என்றான் அவன்.

''தம்பிரான் சுவாமிகளுக்கு உங்களைக் கண்டாலே பிடிக்கவில்லை!''

''காலம் வரும்'' என்றான் அவன்.

''மண்டபத்தில் திரையை விலக்கிப் பார்த்தது தான் உங்கள் மனைவியா? மிகவும் அழகாக இருந்தார்கள்!'' என்றாள் அவள்.

''அழகுக்கென்ன!'' என்றான் அவன்.

''பால் பழமா

வது சாப்பிடுங்களேன்'' என்றான் அவள்.

அவன் தன்னிலைக்குத் திரும்பினான். அங்கிருந்த ஒரு கத்தியை எடுத்துப் பழத்தின் மீது ஓங்கிக் குத்தினான். பழத்தை இரண்டாகப் பிளந்தான். ஒரு பாதியைக் கையில் எடுத்து, ''இது மார்த்தாண்டவர்மன்'' என்றான். இன்னொரு பாதியைப் பார்த்து, ''இது நாராயண நம்பூதிரி'' என்றான்.

''எனக்கொன்றும் இல்லையா?'' என்றாள் அவள்.

அவளது வலது கையை எடுத்துத் தன் மார்பில் வைத்துக் கொண்டு, ''இது யூஜியானு'' என்றான்.

அவள் கண்களில் கண்ணீர் மல்கிற்று.

அவன் சில பழங்களை எடுத்து உண்டான். ஓடிப் போய்ப் பால் கொண்டு வந்தாள் யூஜியானு.

வழக்கம்போலவே வந்த யோகோவா இருவரையும் பார்த்தும் பாராதபடி உள்ளே சென்று விட்டார்.

ரவிவர்மன் எழுந்து உள்ளே சென்று கட்டிலில் சாய்ந்தான். யூஜியானு அவன் அருகிலே அமர்ந்து அவன் மார்பின் மீது சாய்ந்து கொண்டாள்.

அவனது அரசியல் குழப்பத்தை அவளால் தீர்க்க முடியவில்லை. அவளது ஆனந்த மயக்கத்துக்கு உடன்படும் நிலையில் அவன் இல்லை. அதனால் இருவருமே தூங்கவில்லை.

இங்கே இவர்கள்தான் தூங்கவில்லை என்றால், அரண்மனையில் பத்மாவதியும் தூங்கவில்லை.

மெல்லினங் கோதை எவ்வளவு கேட்டும் தன் கண்ணீருக்கான காரணத்தை அவள் கூறவில்லை. அங்கே அப்போது மார்த்தாண்டவர்மனும் இருந்தான். அவனாலும் எதையும் யூகிக்க முடியவில்லை.

பத்மாவதியின் இல்லற தர்மத்தில் வழக்கம் போலவே ஏதோ குழப்பம் என்றுதான் கருதினானே தவிர, அதற்குள்ளே ஓர் அரசியல் இரகசியம் ஒளிந்திருப்பதை அவன் அறியவில்லை.

'கோதை எவ்வளவு புனிதமானவள்? தம்பி மார்த்தாண்டவர்மன் எவ்வளவு கபடமில்லாதவன்? இவர்களுக்கு எதிராகவா?....'

அவள் தலை சுற்றிற்று.

கணவனோடு வாழாமல் இருந்த நாட்களே வளமான நாட்கள் என்பது போல் தோன்றிற்று.

மார்த்தாண்டவர்மன் சொன்னான்:

''ரவிவர்மர் பொதுவாகவே நல்லவர். திடீர் திடீரென்று முடிவுகள் எடுத்து விடுவார். விளைவுகளைப் பற்றிக் கவலைப்பட மாட்டார். என்ன செய்வது? திறமையுள்ள ஒவ்வொருவருடைய நெஞ்சிலும் இருண்ட பகுதி ஒன்றை இறைவன் படைத்திருக்கிறான். வேலைக்காரர்களிடையேகூடப் பார்க்கிறோமே! நல்லவனாக இருந்தால் முட்டாளாக இருக்கிறான். திறமை உள்ளவனாக இருந்தால் அயோக்கியனாக இருக்கிறான். ரவிவர்மர் அயோக்கியர் அல்லர். அவர் எல்லோருக்குமே ஒரு கேள்விக்குறி.''

கோதை சொன்னாள்:

''எல்லோருக்கும் கேள்விக்குறியாக இருப்பதில் தவறில்லை; மனைவிக்குக் கூடவா அப்படி...?''

மார்த்தாண்டவர்மன் சொன்னான்:

''மனைவிக்குக் கணவன் கேள்விக்குறியாக இருந்தால்தான், மனைவி எப்போதும் அவனைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பாள்.''

''நல்ல வேளை, நான் பிழைத்தேன்'' என்றாள் கோதை.

''உன் கணவன் அப்பாவி. அதனால் தான் நீ அகம்பாவியாக இருக்கிறாய்!'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

''நீங்கள் அப்பாவியா...!'' என்றபடி ஜாடையாகக் கன்னத்தைத் தடவிக் கொண்டாள் கோதை.

இப்போது அவர்கள் சரசப் பேச்சில் பங்கு கொள்ளப் பத்மாவதியால் முடியவில்லை.

''சரி. என்னைக் கொண்டு போய் வீட்டில் விடுங்கள்'' என்றாள்.

அவளைத் தேரில் ஏற்றி, கோதையும் கூடவே சென்றாள். அரண்மனைக் காவலர் சிலரும் பின்னாலேயே ஓடினார்கள்.

ரவிவர்மன் மாளிகை திறந்தே கிடந்தது. மூத்த தாவளியும், இளைய தாவளியும் வாசலிலேயே பார்த்தபடி இருந்தனர். பத்மாவதியோடு கோதையும் வருவதைப் பார்த்து, ''என்னம்மா உடம்புக்கு?'' என்று கவலையோடு கேட்டாள் மூத்த தாவளி.

''ஒன்றுமில்லை. முதலில் அவளைத் தூங்க வையுங்கள்!'' என்று சொல்லி விட்டுக் கோதை விடைபெற்றுக் கொண்டாள்.

பத்மாவதி தன் அறைக்குள் சென்று படுத்து மீண்டும் அழ ஆரம்பித்தாள்.

## அத்தியாயம் 11

# பிரம்ம ரத்தம்

அந்த இரவில் பெரும்பாலும் எல்லோரும் தூங்காமல் இருந்தார்கள் என்றால், நாராயண நம்பூதிரி எப்படித் தூங்குவார்? அவரது சிந்தனை எங்கெங்கோ ஓடிக் கொண்டிருந்தது.

அதிலே வேடிக்கை என்னவென்றால் ரவிவர்மனின் சிந்தனை எப்படி எல்லாம் ஓடிற்றோ, அப்படி எல்லாம் அவரது சிந்தனையும் ஓடிற்று.

'அரசைக் கைப்பற்ற ரவிவர்மன் முயற்சி செய்வான்' என்பதில் அவருக்குச் சந்தேகமே எழவில்லை. உரிமை நிறைந்த அவரது இல்லத்தில் அவர் கட்டிலில் புரண்டு புரண்டு படுத்த சத்தமே அதிகம் கேட்டுக் கொண்டிருந்தது.

மிகுந்த முன் எச்சரிக்கையோடுதான் அவர் சில பொறுப்புக்களை அரசரிடம் பெற்றுக் கொண்டிருந்தார். ஆனால் சேனையில் ரவிவர்மனுக்குள்ள செல்வாக்குப் பற்றியும் அவருக்குஅச்சம் இருந்தது.

பாண்டியனோடு நடந்த போரில் ரவிவர்மனுக்கு அடுத்தபடியாக இருந்த இரும்பொறையை அழைத்து அவன் கையில் சேனையை ஒப்படைத்துவிடுவது என்று அவர் முடிவு கட்டினார். விடியும் வரையில்கூட அதற்காக அவர் காத்திருக்க விரும்பவில்லை. எழுந்து கதவைத் திறந்து, அந்த அர்த்தராத்திரியில், அடுத்த அறையில் படுத்திருந்த கேசவ நம்பூதிரியை எழுப்பி, ''இப்போதே போய் இரும்பொறையை அழைத்து வா!'' என்றார்.

இது போன்று அர்த்தராத்திரி அவசரச் செய்திகளில் பழக்கப்பட்ட கேசவ நம்பூதிரி குதிரையில் ஏறிக் கிளம்பினார்.

சிறிது நேரத்தில் கதவு தட்டும் சத்தம் கேட்டது. வெகு வேகமாக எழுந்து கதவைத் திறந்தார் நாராயண நம்பூதிரி.

அங்கே முக்காடிட்ட நிலையில் பாஸ்கர ரவிவர்மன் நின்றான்!

''ஸ்ரீலஸ்ரீ தம்பிரான் சுவாமிகளுக்கு வணக்கம்'' என்று சொன்னபடியே உள்ளே நுழைந்தான் ரவிவர்மன்.

கைகளைப் பின்னால் கட்டி முகத்தைத் திருப்பிக் கொண்ட நாராயண நம்பூதிரி, ''நள்ளிரவில் சேனாபதியார் நகர்ச் சோதனை செய்ய வந்தாரா?'' என்று கேட்டார்.

'' நகரில் சோதனை செய்ய என்ன இருக்கிறது? நகரமே சுவாமிகள் கையில்தானே இருக்கிறது?''

''நாடு, நாட்டு மக்களின் கையிலே தான் இருக்கிறது. அதன் பாதுகாப்பு என்னிடம் இருக்கிறது. யாரோ சிலருக்கு அதன் மீது ஒரு கண் இருக்கிறது.''

''அந்த யாரோ சிலர் மீது தம்பிரான் சுவாமிகளுக்குக் கோபம் போலிருக்கிறது.''

''குத்துவதற்கு முன்னால் கத்தியின் மீது கோபப்படுவதற்கு என்ன இருக்கிறது? ஆனால் கவனம்தான் கத்தியின் மீது இருக்கிறது.''




அமெரிக்க நிறுவனம் ஒன்று வாழ்த்து அட்டைகளைத் தயாரிப்பதில் ஒரு புதுமையைச் செய்திருக்கிறது. நாலு சென்டி மீட்டர் கனமுள்ள அந்த அட்டையின் பின் பக்கத்தில் உள்ள ஒரு பட்டனை அழுத்தினால் 'ஹாப்பி பர்த் டே டு யூ' என்று அது பாடும். அது போல ஒவ்வொரு சந்தர்ப்பத்துக்கும் ஏற்ற வாழ்த்துப் பாடும் அட்டைகளும் உண்டு. இது கிராமபோன் ரிக்கார்டு அல்ல!

வேர்ல்டு நியூஸ் - எம். எஸ்.

---

''சிறுவன் மார்த்தாண்டவர்மனுக்குத் தெரியாதது, தம்பிரான் சுவாமிகளுக்குத் தெரிந்திருக்கிறது.''

'' கன்றைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு பசுவின் கையில் இருக்கிறது.''

'' எந்தப் பசுவும் தன்னுடைய கன்றை இன்னொரு பசுவிடம் ஒப்படைத்ததில்லை; இங்கேதான் அது நடந்திருக்கிறது.''

''நம் இருவருக்குமே நோக்கம் தெளிவாக இருக்கிறது. நல்லது. வந்த விஷயம்......?'' என்றார் நாராயண நம்பூதிரி.

''ஒன்றுமில்லை. தூக்கம் வரவில்லை'' என்று இழுத்தான் ரவிவர்மன்.

'' தாலாட்டுப் பாட நான் தாயல்லவே! தழுவித் தூங்க வைக்க நான் மனைவி அல்லவே....!'' என்றார் நாராயண நம்பூதிரி.

''எனக்குத் தாயும் நீங்களே, தந்தையும் நீங்களே!'' என்றான் ரவிவர்மன்.

''பந்தம் புதியதாகப் பிறக்கிறது! இந்தச் சொந்தம் எதற்காக ஆரம்பமாகிறது.....?'' என்று கேட்டார் நாராயண நம்பூதிரி.

'' சந்தேகத்தை விட்டு விட்டால், சொந்தம் புதியதாகத் தோன்றுது. அந்த நாள் முதல் இந்த நாள் வரை சேரமண்டலத்தின் ராஜ பரம்பரைக்கே கரங்களாகவும், மூளையாகவும் திகழ்வது நம்பூதிரிகள் சபை. மன்னவர் ஆணையை எல்லாம் மகேசுவரனின் ஆணையாக்கி முத்திரை யிட்டது நம்பூதிரிகள் சபை. முதலாம் சேரமான் பெருமாள் காலத்திலிருந்தே சிவானந்த நம்பூதிரியும், கேசவ நம்பூதிரியும், இப்போது நாராயண நம்பூதிரியும் இந்நாட்டைப் பொன்னுடாக்குவதில் பெருமை பெற்றிருக்கிறார்கள். விழிகளுக்

துக் கடற்கரையில் விளையாடிய நாவாய்கள் காற்றடிக்கும் திசையிலே தான் செல்லும். அந்தக் காற்று எந்தத் திசையிலே அடிக்க வேண்டும் என்பதைக்கூட நம்பூதிரிகள்தான் நிர்ணயிக்க வேண்டும். தம்பிரான் சுவாமிக்கு என்மீது ஏற்பட்டுள்ள சந்தேகங்கள் நிவர்த்தியாகிவிட்டால் நான் சில விஷயங்களைச் சொல்ல முடியும். மன்னர் முடி துறந்த பிறகு கொங்கு நாடும், பாண்டிய மண்டலமும் நம்மைவிட வலிமை பெற்றிருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது. அவை நம்மை விழுங்கி விடாமல் இருக்க நான் சுவாமிகளோடு எந்த அளவில் ஒத்துழைக்க முடியும் என்று கேட்கவே வந்தேன்'' என்றான் ரவிவர்மன்.

''அதைக் கேட்பதற்கு நீங்கள் தேர்ந்தெடுத்த நேரம் அர்த்த ராத்திரியாக இருப்பது ஏன்...?'' என்று வினவினார் நாராயண நம்பூதிரி.

''பகலிலே சுவாமிகளைச் சுற்றிலும் கிராம சபைத் தலைவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். இரவு நேரமே சுவாமிகள் சிந்திக்கும் நேரம். ஏன், இறைவனேகூடச் சிந்திக்கும் நேரம் அது தானும்!'' என்றான் ரவிவர்மன்.

''எந்த நேரமும் நான் சிந்திக்கிறேன். என்னுடைய அரசாங்கம் இரவிலும் பகலிலும் நடந்து கொண்டிருக்கிறது'' என்றார் நாராயணநம்பூதிரி.

''ஒரு வம்சத்தை அழித்து மறு வம்சத்தை உருவாக்கிய சாணக்கியன் கூட, இரண்டு நேரங்களிலும் சிந்தித்துக் கொண்டிருந்தான். அவன் உருவாக்கிய புதிய வம்சம் கடைசி வரையில் அவனைக் கைவிடவில்லை. காலின் மீது தடுக்கிய புல்லைக்கூட வஞ்சம் தீர்த்துக்கொண்ட சாணக்கியனை விடத் தம்பிரான் சுவாமிகள் ஒரு படி உயர்ந்தவர் என்பதை நான் அறிவேன். அரசர்கள்கூட அறியாத அரச தர்மத்தை சாணக்கியன் போதித்தான். அரச தர்மத்துக்கான கர்மங்களை அங்கே வகுத்துக் கொடுப்பதே தம்பிரான் சுவாமிகள்தான். அந்த நம்பிக்கை யில்லாமலா மன்னவர் மார்த்தாண்ட வர்மனுக்குப் பட்டம் கட்டி உங்கள் பாதுகாப்பில் விட்டு விட்டுப் போனார்! வாளோடு அவதரித்த பரசுராமனின் பரம்பரை நீங்கள். உங்களைப் பற்றி நான் அதிகம் பேசுவது முகஸ்துதியாக முடியும். பத்மநாப சுவாமியின் மீது ஆணையாக உங்களுக்கு வலுவூட்டவும் ஒத்துழைக்கவுமே நான் விரும்புகிறேன்'' என்றான் ரவிவர்மன்.

நாராயண நம்பூதிரி, ரவிவர்மனின் சாகஸங்களை நன்றாக அறிந்தவர். இவன் நடிக்கிறான் என்று எதிரிகளுக்குத் தெரியும்போதுகூட நடிப்பது சிலரது பழக்கம். ஒரே நடிப்பைத் தொடர்ந்து நடித்தால், அதை உண்மையாக்கி விடலாம் என்று நம்புவது அவர்கள் வழக்கம்.

ரவிவர்மன் தாழ்ந்த நிலையில் பேசப் பேச நாராயணநம்பூதிரி பதில் சொல்ல முடியாத நிலைமையிலானார்.

எதிர்த்துப் பேசினால் சுடச்சுடப் பதில் கொடுத்துவிட முடியும். புகழ்ந்து பேச ஆரம்பிப்பவனை அப்புறப்படுத்துவது கடினமான காரியம்.

நாராயண நம்பூதிரி விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினார்.

''உங்கள் சேவை தேவைப்படும் போது அதைச் சேர மண்டலம் ஏற்கத் தயங்காது. வல்லமை உடையவனை அப்புறப்படுத்தி விட்டு நாட்டின் வலிமையை நான் சோதிக்க மாட்டேன். மன்னவர் இன்னும் திருவரங்கம் போய்ச் சேர்ந்திருக்க மாட்டார். கொங்கு நாட்டிலும், கூடல் நாட்டிலும் அதற்குள் மறு சிந்தனை தோன்றியிருக்க நியாயம் இல்லை. அப்படி ஏதாவது தோன்றினால் கூட உங்களை நான் அழைப்பேன்'' என்றார் நாராயண நம்பூதிரி.

'இப்போது அவனை நம்பிக்கையோடு வெளியேறச் செய்து விட்டால் போதும்' என்று அவன் கருதினார். அவன் போவதற்குள் இரும்பொறையை அழைத்து வரச் சென்ற கேசவ நம்பூதிரி திரும்பி விட்டால் நிலைமை இக்கட்டாக முடியுமே என்று அவர் கருதினார்.

துரதிருஷ்டவசமாக அந்த நேரத்தில் கேசவ நம்பூதிரி, இரும்பொறையோடு வந்து சேர்ந்தார்.

---



**அன்பின் விலை**

கூடை அன்பைக் கொட்டிக் கொடுத்தாள்
கூர்முல்லைப் புன்னகைப் பெண்ணாள்
கூறும்விலை யாதென்று கேட்டேன்
கூம்பாத மனமும் இரு மலர்களுமென்றாள்!

மேலட்டை வண்ணப்படம்: துரைலிங்கம்

இரும்பொறையை ஜாடையாகப் பார்த்த ரவிவர்மன், ''தம்பிரான் சுவாமிகளின் அரசாங்கம் இரவிலும் நடப்பது உண்மைதான்'' என்ருன்.

நாராயண நம்பூதிரி சிறு குழப்பத்துக்குள்ளாகிச் சமாளித்தார். சமாளித்தது மட்டுமல்ல, பதவிப் பிரமாணத்தையே செய்து வைத்தவர் போலப் பேசினர்.

''இவர்தான் நமது புதிய தளபதி இரும்பொறை. உங்களோடு பாண்டிய நாட்டுப் போரில் தோளோடு தோள் நின்றவர். மன்னவர் விருப்பத்துக்கு இணங்க இவர் தலைமைத் தளபதியாக நியமிக்கப்பட்டிருக்கிருர்'' என்ருர்.

தான் எப்போது நியமிக்கப்பட்டோம் என்பதே தெரியாத இரும்பொறை, இருவரையும் மாறி மாறிப் பார்த்தான்.

ரவிவர்மன் அவன் தோளிலே தட்டி, ''சபாஷ் இரும்பொறை, அந்தப் பதவிக்கு நீ தகுதியுள்ளவனே. தம்பிரான் சுவாமிகள் விஷயம் தெரியாமல் எதையும் செய்ய மாட்டார். பாண்டிய நாட்டுப் போரில் நீ காட்டிய சாமர்த்தியம் கொஞ்ச நஞ்சமல்ல. மீண்டும் ஒரு போரை நீ சந்திக்க நேர்ந்தால், நான் பெற்ற வெற்றியை நீ பெறுவாய். பாண்டியர்களையும் கொங்கு நாட்டவரையும் மீண்டும் போர்க்களத்தில் சந்திக்கும் வரை ஆண்டவன் அருளால் உன் பதவி நீடிக்க வேண்டும்'' என்ருன்.

நாராயண நம்பூதிரி ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

இரும்பொறைக்கு இது கனவா, நனவா என்று புரியவில்லை.

ரவிவர்மன் வேறு பக்கம் திரும்பும் போது நம்பூதிரி இரும்பொறையிடம் ஓரக் கண்ணுல் ஜாடை செய்தார்.

கேசவ நம்பூதிரி நின்றபடியே தூங்க ஆரம்பித்தார்.

''பொழுது விடியப் போகிறது'' என்ருர் நாராயண நம்பூதிரி.

''நல்லது ஸ்வாமி. நான் விடைபெற்றுக்கொள்கிறேன். இரும்பொறை! நாம் போகலாமா...?'' என்ருன் ரவிவர்மன்.

நம்பூதிரிக்குத் 'திக்' என்றது.

ரவி வர்மனின் கீழ் வேலை பார்த்தவனல்லவா இரும்பொறை! ''நல்லது தளபதியாரே, போகலாம்!'' என்ருன்.

'இனி நீதான் தளபதி' என்று சொல்ல வாயெடுத்தார் நாராயண நம்பூதிரி. அதற்குள் இரும்பொறையின் தோள் மீது கைபோட்டபடி வெளியேறிவிட்டான் ரவி வர்மன்.

நாராயண நம்பூதிரிக்குத் தலை சுற்றியது. தூங்கிக் கொண்டிருந்த கேசவ நம்பூதிரியின் தலையில் அடித்தார். கேசவ நம்பூதிரி வணக்கம் செலுத்திவிட்டு அடுத்த அறைக்குச் சென்ருர்.

வேதனையுற்ற நாராயண நம்பூதிரி, 'இந்த நேரத்தில் யாரை எழுப்பி என்ன செய்வது' என்று புரியாமல் முன்னும் பின்னும் நடந்தார்.

பொழுது விடிந்தது.

அவசரம் அவசரமாகக் குளித்தார். அரண்மனைக்குச் செல்வதற்காக வெளியிலே வந்தார்.

எதிரே நான்கு குதிரைகளில் நான்கு படை வீரர்கள் வேகமாக வந்துகொண்டிருந்தார்கள். பின்னுலே ஒரு குதிரை வந்து கொண்டிருந்தது. அந்தக் குதிரையின் மீது கத்திக் குத்துக் காயங்களோடு இரும்பொறையின் சடலம் சாய்த்து வைக்கப் பட்டிருந்தது.

(தொடரும்)
























MAKE YOUR MIND INTO A MENTAL MAGNET!

# INSTA-MEMORY

# The worlds only automatic memory course in existence



Now—You can change your memory into a powerful tool of life-success that will lift you head and shoulders above the crowd.

**The only Automatic Memory System in existence**

Insta-Memory is a dramatic new human dynamics discovery that completely supersedes all other methods of memory development. Insta-Memory requires NO MEMORIZATION, NO WORD ASSOCIATIONS, NO KEY WORDS, NO WILL POWER, NO POSITIVE THINKING. With this amazing automatic system, nothing is ever forgotten!

**The only Extrasensory Memory System that truly works**

Insta-Memory shows you the secrets of extraordinary knowledge, energy and the higher powers of the mind, you don't even know about.....and how you can release these secrets INSTANTLY! Insta-Memory shows you how to master the technique of 'instant recall'. For instance, just a few hours after reading this course, you can instantly memorize a twenty-digit number like 18765439086543214569 and recall it instantly a month afterwards! Or even remember the telephone numbers of all your friends and acquaintances. All of this without any particular effort on your part.

**The only Instant Memory Course that guarantees you all this**

Insta-Memory builds you a photographic memory instantly * Offers a fool-proof cure for forgetfullness * Strengthens self-confidence and gives you a dynamic new personality overnight * Reveals the secrets of extrasensory perceptions * Makes your future predictable * Wins you promotions and higher salaries in your job * Unlocks any forgotten memory through a special Automatic Mind Search and Memory Scanning Technique * Gives the secrets of Instant Speed Reading * Lets you acquire greater prestige, popularity and recognition * Tells you how to speak publicly without nervousness * Explains the memory ideas of Socrates, Plato, Aristotle, Bergson, Freud and Jung

**Now yours at half the international price**

In exclusive association with the New York Institute of Personality Development we bring you this amazing new Instant Memory System for only Rs. 55/- (plus Rs. 3/- for packing and postage). This same course is a best seller in America for as much as $ 15 (i.e. Rs. 120/-)

**Read what amazing results people have achieved with insta-memory!**

* I have had tremendous improvements in my job—my superiors are astounded with my super Memory
—Mr. H. D. (New York)

**25% OFF!**
**SPECIAL DISCOUNT OFFER!**

Original price: Rs. 75
Special discount price: Rs. 56

Institute of Human Dynamics
3/305, Navjiwan Society,
Lamington Road, Bombay-400 008.

Yes! Please rush me your astounding INSTA-MEMORY Course by V.P.P. I will pay postman Rs. 56 (Plus Rs. 3 for packing and postage.)

I understand if I am anyway dissatisfied I shall return the course within 7 days for a full refund (less packing and postage)

Name ______________________________

Address ____________________________

___________________________________

Save Rs. 5/-!: Please tick
☐ Cheque for Rs. 54/- enclosed
☐ M.O. for Rs. 54/- sent. (Same 7-day money back guarantee privilege)

INSTITUTE OF HUMAN DYNAMICS
is a division of Business Development Associates, offices also in New York, U.S.A.

directions/ihd/03

# பொன்னியின் புதல்வர்

சுந்தா





## 18. பாரதி புகழாலயம்

**பாரதி என்றொரு சக்தி — அது**
**பொங்கி எழுந்தது பாட்டுருக் கொண்டது**
**பாரதி மீதொரு பக்தி — அது**
**எங்கும் எழுந்தது ஆலயம் கண்டது**

செய்திக் கட்டுரை ஒன்று, சாதாரணமாய் அதற்கு உரிய வறட்டு நடையுடன் அல்லாமல், அலங்கார நடை போட்டு ஆரம்பமாயிற்று, 1945 ஜூன் 10ம் தேதிய கல்கி இதழில்.

தினந்தோறும் பொழுது புலரத்தான் செய்கிறது; சூரியனும் உதயமாகின்றது. ஆனாலும் நாளது ஜூன் மாதம் மூன்றும் தேதி சூரியோதயம் ஒரு தனி மகிமை பெற்று விளங்கிற்று. அந்த மகிமையை மற்ற இடங்களில் உள்ளவர்கள் கண்டார்களோ என்னவோ, தெரியாது. அன்று காலை எட்டயபுரத்தில் தமிழ் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் கூடியிருந்தவர்கள் நிச்சயமாய்க் கண்டார்கள். கண்டதோடு, ''இது சாதாரணமாய்த் தினந்தோறும் உதயமாகும் சூரியன் அல்ல; தமிழ் நாட்டின் மகோந்நதத்தைப் பிரகாசிக்கச் செய்வதற்காகவே உதித்த தனிப்பெருமை வாய்ந்த சூரியன்'' என்பதாக அறிந்தார்கள்.

அற்புதச் சுவை பொங்கும் இந்த வாக்கியங்கள் உயர்வு நவிற்சி போல் தோன்றக்கூடும். ஆனால் இவற்றைத் தொடர்ந்த வாக்கியங்கள் அறிவித்த செய்தி உண்மையில் அற்புதமாகவே இருந்தது. சுப்பிரமணிய பாரதியார் பிறந்த ஊரில் கல்கி எடுப்பித்த புகழாலயத்துக்கு, அடிப்படை அமைந்த செய்தி அது.

பத்தாயிரம் மக்களின் முன்னிலையில் அந்த அடிப்படை அமைப்பு விழா நடைபெற்றது. அதற்குத் தலைமை தாங்கும் பெருமையை, அப்போது ஆட்சியிலோ கட்சியிலோ யாதொரு பதவியும் கொண்டிராத ஒருவருக்கு, தனிப்பெரும் மனிதரான ராஜாஜிக்கு அளித்திருந்தார் கல்கி.

பாரதியாரின் குமாரிகள் தங்கம்மாளும், சகுந்தலாவும், தத்தம் குழந்தைகளுடன், அவருடைய கவிச் சொற்களில் ''முருகா, முருகா, முருகா'' என்று நாட்டைக் குறிஞ்சியில் கூட்டிசை பாடி, ''வருவாய் மயில் மீதினிலே'' என வேண்டி அழைத்தார்கள். அதை அடுத்துப் பாரதியாரின் தேசிய கீதங்களில் ஒன்றான ''பாரத மாதா திருப்பள்ளி எழுச்சி'' உதய ராகங்களில் ஒரு மாலிகையாய் ஒலித்தது. ''பொழுது புலர்ந்தது'' எனப் பூபாளத்தில் தொடங்கிய அப்பாடல், அந்தப் பொன்னுளின் உதயத்தையே போற்றுவது போல் தொனித்தது.

அந்த இரண்டு பாடல்களுக்கும் இடையே விழாவின் முக்கிய நிகழ்ச்சி நடைபெற்றது. சிறுவன் சுப்பையாவாகப் பாரதியார் ஓடி விளையாடி இருக்கக்கூடியதான நிலத்தில், அவருக்கு நினைவாலயம் எழுப்புவதற்கான அடிக்கற்களை ராஜாஜி பதித்தார். அதுவும் எப்படி? தமக்கு இயல்பான அக்கறையுடன். எட்டையபுரம் மகாராஜா ஒவ்வொன்றாய் எடுத்துக் கொடுத்த செங்கற்களை ஒன்றுவிடாமல் ராஜாஜி அடுக்கி வைத்துச் சாந்து பூசினார்: ''கட்டிடத்தையே கட்டி விடுவீர்கள் போலிருக்கிறதே!'' என்று சொல்லிக் கொண்டே அவருக்குக் கல்கி மாலை அணிவித்தார்.

பெருஞ் சாலையை ஒட்டியுள்ள அந்தக் கட்டிடத்துக்கான மனையை, டி.கே.சி. யின் துணையுடன் கல்கி தேர்ந்தெடுத்திருந்தார். அதை எட்டையபுரம் அரசர் விலைக்கு வாங்கி இனாம் சாசனம் செய்து கொடுத்திருந்தார். ''காணி நிலம் வேண்டும்'' என்று பராசக்தியை வேண்டிப் பாடினாரே பாரதியார், கிட்டத்தட்ட அந்த அளவு கொண்டதாய் இருந்தது மகாராஜா அளித்த மனை. அதனுடன் இணைந்தாற்



* பாட்டுக்கொரு புலவனும் அவன் நினைவாக நாட்டுக்கொரு புதல்வர் நிறுத்தி வைத்த மணிமண்டபமும்.
* மணி மண்டபத்துக்கு வடிவமைப்பு அமைத்த சித்தலே.
* சோமயாஜுலுவின் படத்தைக் கல்கி மேலட்டையில் பிரசுரித்து மகிழ்ந்தார்.
* திறப்பு விழா மேடைக் காட்சி. ராஜாஜி.



கல்கி, எட்டயபுரம் ராஜா, ஓமந்தூரார், சோமயாஜுலு ஆகியோரைக் காணலாம்.





போல் பாரதியாரின் அம்மங்காருக்குச் சொந்தமாய் இருந்த நிலத்தைக் கல்கி வாங்கி, மனையின் மொத்த அளவை ஒரு காணிக்குக் கூடுதலாகவே விரிவு படுத்தினர்.

அடிக்கல் நாட்டும் நிகழ்ச்சிக்குப் பிறகு விழாப் பந்தலில் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன — ஏழு மணியிலிருந்து உச்சிவேளை வரை. ராஜாஜியின் முகவுரைக்கும் பேருரைக்கும் இடையே டி.கே.சி., மதுரை வைத்தியநாதய்யர், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், எட்டயபுரத்திலேயே பிறந்து வளர்ந்து, கவிஞருக்குத் தோழராக இருந்த சோமசுந்தர பாரதி, அவருடைய மனைவியார், டாக்டர் சுப்பராயன், நாமக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளை முதலானோர் பேசினர்கள்.

விழாவுக்கு வாழ்த்துக் கூறிப் பெருந்தொகையில் வந்திருந்த செய்திகளை, பாரதி மண்டபத் திருப்பணியில் தொடக்கம் முதல் கல்கிக்குத் துணை புரிந்த சதாசிவம், ராஜாஜியுடன் பகிர்ந்துகொண்டு வாசித்தார். அந்தச் செய்திகளில் ஒரே வாக்கியம் கொண்ட வாழ்த்துரை ஒன்று நீடித்த கரவொலியை எழுப்பிற்று. அந்த வாக்கியத்தைத் தம் கைப்படவே தமிழில் ஒரு பெரியவர் எழுதி, ''மோ. க. காந்தி'' என்று ஒப்பம் இட்டிருந்தார்.

அந்த விழாவைப் பற்றி விமரிசனக் கட்டுரை ஒன்றும், முன்பு குறிப்பிட்ட கல்கி இதழிலேயே வெளியாயிற்று. அதை கல்கி ஒரு தொனியில் தொடங்கி இன்னொன்றுக்கு மாறினர்:

''வெற்றிகரமாக நிறைவேறியது என்று சொல்கிறோமே, அது என்னவென்று கேட்டால், இன்றைக்கு நடந்த வைபவந்தான்!'' என்று ராஜாஜி எட்டயபுரம் அஸ்திவார விழா நடந்து முடிந்ததும் கூறினர். ராஜாஜி எந்த விஷயத்தைப் பற்றியும் அவ்வளவு உற்சாகமாகப் பாராட்டியோ, அளவுக்கு மீறிப் புகழ்ந்தோ சொல்லக்கூடியவர் அல்ல என்பது யாவரும் அறிந்ததே. அத்தகையவர் மேற்கண்டவாறு சொல்ல வேண்டுமென்றால், எட்டயபுரம் திருவிழா எவ்வளவு நன்றாக நடந்திருக்க வேண்டும் என்று சொல்ல வேண்டியதில்லை. இதுவரை தமிழ் நாட்டில் இலக்கிய சம்பந்தமான இத்தகைய மகத்தான உற்சவம் ஒன்று நடந்தது கிடையாது என்று சொன்னால் சிறிதும் மிகையாகாது....

என்னுடைய சொந்த அநுபவத்தில், மனிதனுடைய புலன்களுக்கும் அறிவுக்கும் எட்டாத சக்தி ஒன்று இருப்பதாக நான் உணர்ந்திருக்கிறேன். அத்தகைய சக்தியானது, வெறும் குருட்டுத்தனமான சக்தி அல்ல; ஏதோ ஓர் ஒழுங்கின்படி, ஒரு நியதியின்படி, இந்த உலகத்தையும் இதில் நடைபெறும் சகல காரியங்களையும் நடத்தி வருகிறது என்று நம்புகிறேன்.

அந்தச் சக்தியானது தற்சமயம் தமிழ் நாட்டை ஒரு மகோன்னதமான நிலைமைக்குக் கொண்டு போகும் மார்க்கத்தில் நடத்திக் கொண்டு வருகிறது என்று நான் பரிபூர்ணமாய் நம்புகிறேன். பாரதியார் பாடிப் பராவியுள்ள பராசக்தி அதுதான் போலும்! அந்த மகாசக்தியின் காரணமாகத்தான், எட்டயபுரத்தில் நான் கண்ட அற்புதம் நிகழ்ந்தது என்று எனக்குத் தோன்றுகிறது.



## துரதிர்ஷ்டம்!!

ராமன் தெருவில் சென்று கொண்டிருந்தான். திடீரென்று அவனுக்குக் கார் ஓட்டினால் எப்படி இருக்கும் என்று தோன்றியது.

அதிர்ஷ்டவசமாக அங்கு ஒரு கார் நின்றிருந்தது. அதை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

துரதிர்ஷ்டவசமாக, எதிரில் ஒரு குழந்தை ஓடி வந்தது.

அதிர்ஷ்டவசமாக, குழந்தைமீது அவன் மோதவில்லை.

துரதிர்ஷ்டவசமாக, பக்கவாட்டில் இருந்த மரத்தின்மீது மோதினான்.

அதிர்ஷ்டவசமாக, கை கால்களுக்குக் காயமில்லை.

துரதிர்ஷ்டவசமாக அவன் உடலில் பயத்தினால் மூச்சு நின்றிருந்தது.

— வி. ராதாகிருஷ்ணன்

---

இவ்வாறு பகுத்தறிவுக்கு அப்பாற்பட்ட முறையில் கல்கியின் சிந்தனை ஓடியதற்குத் தக்க காரணம் உண்டு. ஆயிரக் கணக்கான அன்பர்களின் பண உதவியினாலும் உழைப்பினாலும் தான் பாரதி மண்டபத் திருப்பணி நடந்தது. ஆயினும் அந்த உதவியையும் உழைப்பையும் திரட்டி அதில் ஈடுபடுத்துவதற்கு அவரேதான் காரணமாயும் கருவியாயும் அமைந்தார். அப்படி அவர் அமைந்ததும் அதற்கு முன் அவர் கொஞ்சமும் எண்ணியிராதபடி, சிறிதும் எதிர்பார்த்திராதபடி நேர்ந்ததாகும். அதைத் ''தற்செயல்' என்று பகுத்தறிவு மொழியிலும், ''தெய்வச் செயல்'' என்று ஆஸ்திக மொழியிலும் சொல்லலாம். எப்படி என்றால்—

எட்டயபுரத்து ''பாரதி இலக்கிய மன்றம்'', 1944 செப்டம்பர் மாதம் டி. கே. சி.யின் தலைமையில் நடத்திய தமிழிசை விழாவில் சிறப்புப் பேச்சாளராய்க் கல்கி கலந்து கொண்டார். (அந்த மன்றத்தை அந்த ஊர்த் தொடக்கப் பள்ளி ஆசிரியர் கே.பி. எஸ். நாராயணன் தம்மைப் போன்ற சில கலைஞர்களின் உதவியுடன் நிறுவி ஜமீன்தாரின் மைத்துனர் அமிர்தசாமியைக் காப்பாளராயும், ''மேயர்'' கந்தசாமி செட்டியாரைத் தலைவராகவும் கொண்டு நடத்தி வந்தார்.)

விழா நிகழ்ச்சிகளுக்கு இடையே, தங்கம்மாளும், மன்றத்து இளைஞர்களும் கல்கியையும் ரஸிகமணியையும் அழைத்துச் சென்று பாரதியார் பிறந்த வீட்டையும் அவர் புழங்கிய இடங்களையும் காட்டினார்கள். எட்டயபுரம் ஜமீன்தாரும் அமிர்தசாமியும் அவர்களுக்கு விருந்தளித்து அளவளாவினார்கள்.

சென்னைக்குத் திரும்பிய கல்கி, தமது எட்டயபுரம் அனுபவங்களை ''பாரதி பிறந்தார்'' என்ற தலைப்புடன் ஒரு கட்டுரையில் எழுதி, தமது பத்திரிகையின் அக்டோபர் 8ம் தேதிய இதழில் வெளியிட்டார். அந்தக் கட்டுரையின் இறுதியில் பாரதி மன்றத்து இளைஞர்கள் தம்மிடம் விடுத்திருந்த வேண்டுகோள் ஒன்றைத் தெரிவித்தார்:

> பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் அவருடைய ஞாபகார்த்தமாக ஒரு சிறு புத்தக நிலையமாவது ஏற்படுத்த வேண்டும் என்பது எட்டயபுரத்து இளைஞர்களின் விருப்பம். அதற்கு வேண்டிய ஒத்தாசைகளை நான் செய்ய வேண்டும் என்றும், தமிழ் மக்களை அதில் ஊக்கம் கொள்ளச் செய்ய வேண்டும் என்றும் அவர்கள் ரயில் கிளம்பும் வரையில் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.
>
> இதோ என்னாலான ஒத்தாசையை நான் செய்தாகி விட்டது. இனிமேல், அந்த ஊக்கமும் உற்சாகமும் உள்ள இளைஞர்களின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டியது தமிழ் மக்கள், தமிழ் அன்பர்களின் பொறுப்பு.

நிதி திரட்டும் திட்டம் எதையும் நேராக அறிவிக்காத, பொதுப்படையான வேண்டுகோள்தான் இது. ஆயினும், இதைக் கண்டவுடனேயே கி. ரகுநாதன் என்ற மயிலாப்பூர் இளைஞர் ஐந்து ரூபாய்க்கு ஒரு செக் இணைத்த கடிதம் ஒன்றைக் கல்கிக்கு அனுப்பி வைத்தார். அந்தக் கடிதத்தைக் கல்கி வெளியிட்டு, ''எட்டயபுரத்தில் பாரதியின் ஞாபகார்த்தமாக ஒரு வாசகசாலை அமைக்கவேண்டுமானால், குறைந்தபட்சம் அதற்கு ஒரு பெரிய ஐந்து ரூபாய், அதாவது ஐயாயிரம் ரூபாயாவது வேண்டும்'' என்றும், ஊக்கம் அளிக்கும் விதத்தில் வேறு அன்பர்களிடமிருந்து நன்கொடை வரவில்லை என்றால், அந்த

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூற்றாண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. பிஞ்சு மென்மை கொடுக்கும் பியர்ஸ்—தூய்மைக் கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-PS. 56-140 TM



**'டி.வி. வேணுமா ? அப்பா வேணுமா?' என்று அமெரிக்கக் குழந்தைகளைக் கேட்டபோது 100க்கு 44 குழந்தைகள் 'டி. வி.' என்று சொல்லிவிட்டார்கள்!** - லிங்க்-பாலி

---

ஐந்து ரூபாய் செக் ரகுநாதனுக்குத் திருப்பி அனுப்பப்படும் என்றும், அடிக்குறிப்பில் எழுதினார்.

அவ்வளவுதான்! இமயம் முதல் இலங்கை வரை பல ஊர்களிலிருந்து ஒன்றும், பத்தும், நூறுமாக மணியார்டர்களும், செக்குகளும் வந்து குவிந்து, கல்கியையும் கல்கி அலுவலகத்தையும் திணற அடித்தன. நாலு மாதங்களில் 36 ஆயிரம் ரூபாய் சேர்ந்து விட்டது. கோரிய தொகைக்குமேல் ஏழு மடங்கு கிடைத்து விட்டதை, 18—2—45 இதழில் கல்கி அறிவித்து ''போதும்! போதும்! இனி யாரும் பணம் அனுப்ப வேண்டாம்'' என்று கேட்டுக் கொண்டார். அதைப் பொருட்படுத்தாமல் மேலும் பலர் பணம் அனுப்பி கொண்டே இருந்தார்கள். 42 ஆயிரம் சொச்சத்துடன் பண வரத்து ஓய்ந்ததும், அந்தத் தொகையை ''பாரதி ஞாபகார்த்த நிதி'' என்ற கணக்கில் பாங்கில் கட்டிவிட்ட தகவலை, அடுத்த மாதம் 18ந் தேதிய இதழில் கல்கி அறிவித்தார்.

அந்தத் தொகையிலிருந்து பத்தாயிரம் ரூபாயைத் தனிப்படுத்தி, அதன் வட்டிப் பணத்தைப் பாரதியின் மனைவியாருக்கு ஆயுட்காலம்வரை பாங்கி நிர்வாகிகள் அனுப்பிக் கொடுக்கும்படி கல்கி ஏற்பாடு செய்தார். (அதன்படியே செல்லம்மாளுக்கு மூன்று மாதங்களுக்கு ஒரு தடவை நூற்றுப் பன்னிரண்டரை ரூபாய் உதவிப் பணம் கிடைத்து வந்தது.)

கூடுதலாய்த் தொகை சேர்ந்ததைப் பார்த்த கல்கி சிறிதாக நூல் நிலையம் ஒன்றை அமைப்பதென்று தொடக்கத்தில் கொண்ட யோசனையை மாற்றிக் கொண்டு, பெரிதாகவே நினைவாலயம் ஒன்றை எழுப்புவதென்று தீர்மானித்தார். அதற்கான வடிவப் படத்தை கல்கி கேட்டுக் கொண்டதன் பேரில், எல். எம். சித்தலே என்ற புகழ் மிக்க கட்டடச் சிற்ப நிபுணர் வரைந்து கொடுத்தார் — அன்புக் காணிக்கையாகவே. 9—9—45 தேதிய கல்கி இதழில் வெளியான அந்த வடிவப் படம், ஏற்கனவே அடிக்கல் நாட்டு விழாவின் போது காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது. அந்தப் படத்தில் பதிந்த வடிவத்தைக் காணி நிலத்தில் தூணிலழகிய தூய்ய நிற மாளிகையாய் எழுப்பும் பொறுப்பை, கல்கி வேண்டிக் கொண்டதன் பேரில், அதிகாரமும், ஆள் பலமும் வாய்ந்த எட்டயபுரம் மகாராஜா உவந்தேற்றுக் கொண்டார்.

பாரதி மணி மண்டபம் கட்டம் கட்டமாக எழுந்து கொண்டிருக்கையில் வேறு இரண்டு பெரும் நிதி திரட்டல் முயற்சிகளில் கல்கி ஈடுபட்டார்— ''பாரதியாரின் பரம்பரையில் வந்த கவி'' என்று பெருமையுடன் சொல்லிக் கொண்ட நாமக்கல் ராமலிங்கம் பிள்ளைக்குப் பணக் கிழி அளிப்பதற்கானது ஒன்று; யாரை நினைத்துக் கொண்டு, ''நூலோர்கள் செக்கடியில் நோவதுவும் காண்கிலையோ-சர்வேசா!'' என்று பாரதியார் பாடினாரோ, அந்தக் கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளைக்கு நினைவுச் சின்னம் நிறுவுவதற்கானது மற்றொன்று. அவற்றிற்கெனத் தனித்தனியே அமைந்த குழுக்களில் சேர்ந்து கல்கி திரட்டிக் கொடுத்த பணம் வெகுவானது.

அந்த இரண்டு முயற்சிகளுக்கும் இடையே எட்டயபுரத்துக்கு அடிக்கடி கல்கி சென்று, மண்டபக் கட்டட வேலையைப் பார்வையிட்டு வந்தார். பாதிக்கு மேல் வேலை நடந்திருந்த சமயத்தில் முன்பு திரட்டிய பணமெல்லாம் செலவழிந்து விட்டிருந்ததைக் கண்டார். முழுதுமாய் மண்டபத்தைக் கட்டி முடிப்பதற்கும், அதில் நூல் நிலையம் அமைத்து நடத்துவது, ஆண்டுதோறும் அங்கே பாரதி விழாக் கொண்டாடுவது, அதன் பராமரிப்புக்கு வகை செய்வது போன்றவைகளுக்கும் மேலும் நிறையப் பணம் வேண்டியதாய் இருந்தது. மண்டபத் திறப்பு விழாவுக்கு வேறு தனியாகப் பணம் தேவையாயிருந்தது. முன்பு மள மளவென்று பணம் வந்து சேர்ந்து கொண்டிருந்தசமயத்தில் ''போதும் போதும்'' என்று சொல்லி வசூலை நிறுத்தியது எவ்வளவு தவறு என்பதை உணர்ந்தார். மீண்டும் நிதி திரட்டாமல் தீராது; ஆனால் அது குறித்து அவருக்குத் தயக்கமாயும் கவலையாயும் இருந்தது. அதை அறிந்த கல்கியின் அருமை நண்பர் விட்டலபுரம் வேங்கடாச்சாரி, நூறு

---



**பாரீஸ் நகர ஹோட்டல்களில் மாடி மேலே போகப் போக வாடகை குறைவு. அதாவது முதல் மாடியைவிட ஏழாவது மாடியில் இருந்தால் வாடகை மிகக் குறைவாக இருக்கும்!**

— உமனிஸ் ஈரா — பாபு

ரூபாய் நன்கொடை அனுப்பினர். அத்துடன் இணைத்த கடிதத்தில், ''தங்கள் முயற்சி மீண்டும் தொடங்கட்டும், தமிழ் மக்களின் தாராள குணத்தில் இன்னும் தயக்கம் காட்டுவானேன்?'' என்று எழுதியிருந்தார்.

அந்த விவரத்தைக் கல்கி வெளியிட்டதை அடுத்து, மறுபடியும் நிதி சேரலாயிற்று. ஆனால் அப்போது பணப் புழக்கம் குறைந்துவிட்ட காரணத்தால், முன்போல் தானாகவும் எளிதாகவும் சேரவில்லை. பலரைக் கல்கி நேரில் அணுகிக் கேட்க வேண்டியதாயிற்று. அதற்கெனப் பல ஊர்களுக்குச் செல்லும்படியும் ஆயிற்று. அந்த நிதி திரட்டல் பயணங்களில், வேங்கடாசாரியையும், சின்ன அண்ணாமலையையும், சிலவற்றில் டி. கே. சி.யையும் கூடக் கல்கி துணைக்குச் சேர்த்துக் கொண்டார்.

முதல் வசூலிலும் இரண்டாம் வசூலிலுமாக ஒரு லட்சம் ரூபாய்க்கு மேல் சேர்ந்தது. வெவ்வேறு கல்கி இதழ்களில் நூறு பக்கங்களுக்கு மேல் அதன் விவரப் பட்டியல்கள் வெளியாயின. அவற்றிலிருந்து ஒருசில விவரங்களை மட்டுமே இங்கே கவனிக்க இயலும்.

எட்டயபுரம் அரசர் ரொக்கமாயும், நில தானம், அன்னதானம் முதலிய இனங்களாயும் அளித்த நன்கொடை அக்காலப் பண மதிப்பின்படி பதினையாயிரம் பெறும். முதல் முதலாகப் பெருந் தொகை வழங்கியவர், வர்த்தகப் பிரமுகர் வி. எல். நரசு; அவர் கொடுத்த இரண்டாயிரம் ரூபாய் செக்கைக் கண்டதும் தூக்கிவாரிப் போட்டதாகக் கல்கி எழுதினர். பின்னர், இன்னும் அதிகமாய்த் தூக்கிவாரிப் போடும்படியாக ஏ. வி. மெய்யப்பன் மூவாயிரம் ரூபாய் கொடுத்தார். டி.கே. எஸ். சகோதரர்கள், நவாப் ராஜமாணிக்கம், சென்னை சிவில் சப்ளை இலாகா நாடகக் குழுவினர் ஆகியோர் உதவி நாடகங்கள் போட்டு அளித்த தொகைகள் மொத்தம் பத்தாயிரம் ரூபாய். ராணிப்பேட்டை தேச பக்தரான கே. ஆர். கல்யாணராமய்யரும் முகமத் கலீமானும் சேர்ந்து உள்ளூரிலிருந்தும், அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்தும் கிட்டத்தட்ட இரண்டாயிரத்து நானூறு ரூபாய் திரட்டிக் கொடுத்தார்கள்.

மேலே கடைசியாகக் குறிப்பிட்ட நன்கொடையை நேரில் ஏற்றுக்கொள்வதற்காக 1947 ஆகஸ்டு 30ம் தேதி அதாவது நாடு சுதந்திரம் அடைந்ததற்குப் பதினைந்தாம் நாள், ராணிப்பேட்டைக்குச் சென்றிருந்தார் கல்கி. அப்போது அவர், பிரிட்டிஷ் ஆட்சிக்கு லார்டு கிளைவ் அடிகோலிய ஆர்க்காடு கோட்டையில் பாரதியார் பாடியபடி, ஓங்கி வளர்ந்ததோர் கம்பத்தில் தாயின் மணிக்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்ததைக் கண்டார்.

அதற்குச் சுமார் இரண்டு மாதங்களுக்குப் பிறகு, அக்டோபர் 11ம் தேதியன்று, எட்டயபுரத்தில் பாரதியார் பிறந்த வீட்டின் வெளி மாடியில் அவருடைய நினைவாலயத் திறப்பு விழாவுக்குப் பூர்வாங்கமாக, தாயின் மணிக்கொடி பறக்க விடப்பட்டது. அந்த வீட்டில் பிறந்தவர் கண்ட சுதந்திரக் கனவு நனவானதையும், அவர் இயற்றிய தேசியப் பாடல்கள் மூலம் எண்ணிலா விடுதலை வீரர்கள் தோன்றியதையும் அது நினைவூட்டியது. அக்கொடியைத் தமிழ் எழுத்தாளர்களின் சார்பில் ஏற்றுவிக்கும் பெருமையைப் பெரியசாமி தூரன் அடைந்தார்.

மற்றொரு மணிக் கொடியை, வெண்ணிற பாரதி மண்டபத்தை யொட்டி அமைந்திருந்த பந்தலில், காரைக்குடி கம்பன் கழகச் செயலாளர் சா. கணேசன் அன்று மாலையில் ஏற்றுவித்தார்.



**கடுமையான உழைப்பின் மூலம் ஒருவன் உருவாகும் விதம் இருக்கிறதே, அதுதான், அவனுடைய உழைப்புக்குச் சரியான வெகுமதி; அதற்காகக் கிடைக்கும் பணக்கூலி அல்ல.**

— மிர்ரர் - 'முத்து'

---

அடுத்த இரண்டு நாட்களில் நடைபெறப் போகும் மண்டபத் திறப்பு விழா நிகழ்ச்சிகளுக்கு அதுவே கொண்டாட்டக் கொடியேற்றமாய் இருந்தது. வாழையும் கமுகும் கூந்தல் பனைகளும் தழை வடங்களும் மலர்ச் சரங்களும் அழகூட்டிய அந்த மாபெரும் விழாப் பந்தல் கணேசனின் பொறுப்பில் அமைக்கப்பட்டதாகும்.

விழா நிகழ்ச்சிகள் பற்றி எல்லாப் பத்திரிகைகளிலும் பெரிதாகச் செய்திகள் வெளியாயின; எவ்வளவு பெரிதாக என்பதை ''ஹிந்து''வில் நாலு பத்திகளிலும், ''தினமணி''யில் இரண்டு முழுப் பக்கங்களிலும் அவை நிறைந்திருந்தன என்பதிலிருந்து அளவிட்டுக் கொள்ளலாம். அவை எல்லாமே பொதுவாக, ஆசியாவிலேயே கவிஞர் ஒருவருக்கு அப்படியொரு நினைவுச் சின்னம் அதற்கு முன் அமைந்ததில்லை என்பதைக் குறிப்பிட்டன. மண்டபத்துக்கு அடிக்கல் நாட்டிய ராஜாஜியே அதைத் திறந்து வைத்த பொருத்தத்தைச் சில பத்திரிகைகள் சுட்டிக் காட்டின. இன்னும் சில பத்திரிகைகள், அதைக் கல்கியின் அரிய சாதனை என்று பாராட்டி எழுதின.

அந்தப் பத்திரிகைச் செய்திகளைக் கொண்டே விழா நாட்களில் நிகழ்ந்தவற்றைச் சுருக்கமாய்ப் பார்ப்போம்—எதற்கும் எவ்வித அடைமொழியும் அவசியம் இல்லை.

''பாரதியாரின் உருவப் படம் முகப்பில் பொருத்திய தனி ரயில் ஒன்று ''பாரதி ஸ்பெஷல்'' — சென்னையிலிருந்து 10ந் தேதி மாலை புறப்பட்டு மறுநாள் பிற்பகலில் கோவில்பட்டி வந்து சேர்ந்தது. அதில், மேற்கு வங்க கவர்னர் ராஜகோபாலாச்சாரியார், சென்னைப் பிரதம மந்திரி ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், மற்ற அமைச்சர்கள், சட்டசபைகளின் உறுப்பினர்கள், வெவ்வேறு கட்சிகளின் தலைவர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகை நிருபர்கள் முதலானோர் வந்து இறங்கினார்கள். வரவேற்புக் குழுவின் தலைவரான எட்டயபுரம் மகாராஜா, அக்குழுவின் பொதுச் செயலாளரும், திருநெல்வேலி காங்கிரஸ் தலைவருமான சோமயாஜுலு, கல்கி, சதாசிவம் முதலியோர் அவர்களை வரவேற்று, சாரி சாரியான கார்களில் எட்டு மைல் தொலைவில் உள்ள எட்டயபுரத்துக்கு அழைத்துச் சென்றார்கள். ராஜாஜியும் அமைச்சர்களும் அரண்மனையிலும், மற்றவர்கள், பள்ளிக்கூடம் போன்ற பொதுக் கட்டிடங்களிலும் நூற்றுக்கணக்கான கொட்டகை விடுதிகளிலும் தங்கினார்கள். முன்பே வந்திருந்த பாரதியாரின் குடும்பத்தினர் மேயர் சுந்தசாமியின் விருந்தினராய் இருந்தார்கள்.

ரயில்களிலும் பஸ்களிலும் வந்து குழுமியவர்களின் தொகையை ஐம்பதாயிரத்திலிருந்து ஒரு லட்சம்வரை நிருபர்கள் மதிப்பிட்டார்கள். அவ்வளவு கூட்டத்தைச் சமாளித்த, போலீஸ் படையினர், தொண்டர்கள் சாரணர்கள் ஆகியோரின் தொகை இரண்டாயிரத்துக்கு மேல் இருக்கும்.

லாரி லாரியாக எங்கிருந்தெல்லாமோ தண்ணீரைக் கொண்டு வந்து அங்கங்கே ஏனங்களில் கொட்டிய வண்ணம் இருந்தார்கள். சாப்பாட்டுப் புரைகளில் பந்திகள் ஓயாமல் நடந்து கொண்டேயிருந்தன.

ஊர் முழுவதும் வளைவுகளாலும் தோரணங்களாலும் கொடிகளாலும் விழாக் கோலம் பூண்டு பாரதித் திருநகரமாய் மாறியிருந்தது.

விழாவின் பிரதான நிகழ்ச்சி 13ம் தேதி காலையில்—

மூன்று யானைகள் முன்னே நடக்க, மேள தாளங்கள் முழங்க, ராஜாஜியும் ஓமந்தூர் ரெட்டியாரும் அரண்மனையிலிருந்து பவனிபுறப்பட்டு, வாழ்த்தொலி எழுப்பிய மக்களின் வரிசைகளுக்கு ஊடே விழாப் பந்தலை அடைந்தார்கள்.

குறிப்பிட்ட சுபவேளையில், 'பாட்டுக்கொரு புலவ'ரின் புகழ் மண்டபத்தை நாட்டுக்கொரு புதல்வர் திறந்துவைத்தார். சங்கங்கள் முழங்கின; பேரிகைகள் ஒலித்தன; நாதஸ்வர இசை ஓங்கி எழுந்தது; கவிஞரின் புதல்வியர் ''வாழிய செந்தமிழ்'' பாடினர். பொழிந்தது மலர் மாரி. எத்தனையோ காமெராக்காரர்கள் இருந்தும், அவர்களில் எவரும் அந்த நிகழ்ச்சியைப் படம் எடுக்க முடியாதபடி கூட்டம் நெரித்துத் தள்ளிற்று.

பாரதியாரின் ''பொழுது புலர்ந்தது'' என்ற பாடலையும் பாரதியாரைப் பற்றிய கல்கியின் ''தெய்வத் தமிழ்

---



**மனித குலத்தை மூன்றாகப் பிரிக்கலாம் — அசைக்க முடியாதவர்கள்; எதற்கும் அசைபவர்கள்; எதையும் அசைப்பவர்கள்.**

— பெஞ்சமின் ஃப்ராங்ளின் - ராமு

கடவுள் சில சமயம், மனிதனுக்கு இன்று தேவையானதையெல்லாம் அளித்துத் தண்டிக்கிறார்.

- இங்கர்சால் — சாமி



நாட்டினிலே'' என்ற கீதத்தையும் விழாப் பந்தலின் மேடையில் எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடி முடித்ததும், சொற்பொழிவு நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின.

சோமயாஜுலு வரவேற்புரை நிகழ்த்தினார். அதை அடுத்து முன்னுரை பேசிய தலைவர் ராஜாஜி, பலர் பேச வேண்டி இருந்ததை எண்ணிச் சுருக்கமாகவே அதை முடித்துக் கொண்டார். நிகழ்ச்சி நிரலின்படி அவரைத் தொடர்ந்து பேசியவர்களில் சிலர்: சென்னை சட்டசபையின் நாயகர் சிவ ஷண்முகம் பிள்ளை, உணவு அமைச்சர் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவானந்தம், மதுவிலக்கு அமைச்சர் டானியல் தாமஸ், மதுரை தேசபக்தர் மௌலானா சாகிப், நாமக்கல் கவிஞர், ம. பொ. சிவஞானம், எல். கிருஷ்ணசாமி பாரதி.

ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் பாரதியாரின் உருவச் சிலையைத் திறந்து வைத்துப் பேசினார்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் காமராஜ், அண்மைக்கால அரசியல் வேற்றுமைகளையும் பிணக்கையும் மறந்து, விழாவில் கலந்து கொண்டு உரை நிகழ்த்தியதைத் தனிச் சிறப்புடன் குறிப்பிட வேண்டும். (பேசிய பின், மேடையிலிருந்து இறங்கிச் சென்று சபையோருடன் உட்கார்ந்த அவரை, கல்கி அணைத்துக் கூட்டி வந்து, மேடையில் ராஜாஜிக்குப் பக்கத்தில் அமரச் செய்தார்.)

சகுந்தலா பாரதி, தாம் இயற்றிய அகவற் பா ஒன்றை இடையே பாடினார்; நடிகர் டி. கே. ஷண்முகம், ''ஜய பேரிகை கொட்டடா!'' என்ற பாடலை இறுதியில் பாடினார்.

''அன்று நான் கேட்டது அமரர்தான் கேட்பரோ!'' என்பதாகக் குயில் பாட்டில் பாரதியார் வியந்ததைப் போல் அவருடைய மணி மண்டப விழாவில் கலந்து கொண்டவர் ஒவ்வொருவரும் சொற்பொழிவுகளையும், இசைக் கச்சேரிகளையும் கேட்கையில் வியந்தார்கள். ''இன்னிசைப் பாட்டினிலே யானும் பரவசமாய்'' என்று அதே பாட்டில் கவிஞர் வெளியிட்ட உணர்ச்சியை, முதல் நாள் மாலை பெரும்பாலும் அவருடைய பாடல்களாலேயே அமைந்த எம். எஸ்.ஸின் கச்சேரியைக் கேட்டவர்கள் அனுபவித்தார்கள். மீண்டும் அதே குயில் பாட்டில், ''நெட்டைக் கனவின் நிகழ்ச்சியிலே கண்டேன் யான்'' என்று பாரதியார் சொன்னது விழாவுக்கு முந்திய நாள் ஆனந்தியும் ராதாவும் நிகழ்த்திய நடனக் கச்சேரிக்குப் பொருத்தமாய் இருந்தது. அதிலே சிறுமிகள் இருவரும், எம். எஸ்.ஸின் பின்னணி இசையுடன், ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டதை ஆடிக் காட்டினார்கள். ''வெற்றி எட்டுத் திக்கும் எட்ட'' முரசைக் கொட்டி முழக்கினார்கள். ஊர்வலத்திலும் விழாப் பந்தலிலும் குளிக்கரை பிச்சையப்ப பிள்ளையின் நாயனப் பேரிசை ''இன்னமுதைக் காற்றினிடை எங்கும் கலந்தது போல்'' இருந்தது. நிறைவுக் கட்டத்தில் கச்சேரி செய்த தண்டபாணி தேசிகர் ''பாட்டுக் கொரு புலவன் பாரதியடா'' என்ற கவிமணியின் பாடலை எடுத்ததும், ஆயிரம் குரல்கள் அவருடன் சேர்ந்து பாடின.

அரை மணி நேரம் நன்றியுரை நிகழ்த்தினார் கல்கி. அதையே பின்னர், தமது பத்திரிகையில் அக்டோபர் 26ம் தேதி இதழில் ஆறு பக்கங்கள் நிறைத்து எழுதினார். விழாவின் வெற்றிக்குக் காரணமாய் இருந்த பலரையும் அதில் குறிப்பிட்டார். அவர்களில் சோமயாஜுலுவைச் சிறப்பாகக் குறிப்பிட்டு, அவருடைய உருவத்தை அந்த இதழின் அட்டையில் பொறித்தார்.

விழாவின் வெற்றிக்குக் கல்கியே இயக்க சக்தியாக இருந்தார்; ஆயினும் அதற்கு உரிய பெருமையைப் பிறருக்கே அளித்தார். பாரதி மண்டபம் எழுவதற்கு அவரே ஆதார சக்தியாய் இருந்தார்; ஆயினும் அதற்கு உரிய பெருமை முழுவதையும் தமிழ் மக்கள் அனைவருக்கும் உரியதாக்கினார். விழாவை முன்னிட்டு அம்மாதம் 12ம் தேதி பிரசுரமான கல்கி சிறப்பிதழின் தலையங்கத்தில் உணர்ச்சி மிக்க வரிகளில் அதை அவர் வெளியிட்டார்:

அன்பினாலும் ஆர்வத்தினாலும் கட்டிய மணி மண்டபம்; ஆசையோடும் பாசத்துடனும் கட்டிய எழில் மாளிகை; தமிழ் மக்கள் தங்கள் இதயம் கவர்ந்த கவியரசருக்குப் பக்தியோடு சமர்ப்பித்த காணிக்கை; ஆயிரக்கணக்கான மக்கள் நாலணா முதல் நாலாயிரம் ரூபாய்வரையில் மனமுவந்து மகிழ்ச்சியுடன் உதவிய நன்கொடைகளைக் கொண்டு கட்டிய அற்புதத் திருப்பணி.

கவியரசரின் கனவைத் தமிழ் மக்கள் இன்று நிறைவேற்றி விட்டார்கள்! காணி நிலத்திலே ஒரு கவின் பெறு மாளிகை கட்டித் தந்து விட்டார்கள்! (தொடரும்)



# ஓய்வு

போட்டிக்கதை: 22

குரோம்பேட்டை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து கிட்டத்தட்ட ஒன்றரைக் கிலோமீட்டரில் இருந்தது அந்தக் காலனி. மெள்ள மெள்ள விஸ்தாரமாகி வரும் அந்தப் புதிய காலனியின் பெயர் சாமுண்டி நகர். பெரியதாகச் சொல்லிக் கொள்ளுமளவு வியக்க வைக்கும்படியான நவீனக் கட்டடங்கள் அங்கே எதுவும் இல்லை. சாதாரணமான சின்னச் சின்ன வீடுகள்தான். பெரும்பாலும் மத்தியரகக் குடும்பங்களே அந்த இடத்தை ஆக்கிரமித்திருந்தன. எல்லோருமே வெவ்வேறுவிதமான அரசாங்க ஊழியர்கள். பெரும்பாலும் அவை அரசாங்கத்தில் வீடு கட்டத் தரப்படும் கடன் வசதியை உபயோகித்தே கட்டப்பட்ட வீடுகளாகும். எனவே, கண்டிப்பு மிக்க – சிக்கனம் நிறைந்த அமைப்புக் கொண்டவை. தாங்கள் ஒரு பகுதியில் குடியிருந்தபடியே இன்னொரு சிறு பகுதியைக் குடிக்கூலிக்கு வாடகைக்கு விடும் திட்டத்திலேயே கட்டப்பட்ட பெரும்பான்மை வீடுகள் அவை. எத்தனையோ குடும்பங்கள் அரைகுறையான நிலையிலேயே ஏதோ கிரகப்பிரவேசம் என ஒன்றைச் செய்து காட்டிவிட்டுத் தங்கள் வீட்டுக்குள் புகுந்து கொண்டிருக்கின்றன. பொதுவாக அவர்களுக்குப் பொழுது விடிந்து ஊர் அடங்கும் வரை பேச்சு, கவனமெல்லாம் தங்கள் பகுதியின் முன்னேற்றத்திலேயேதான்.

அவர்களுடைய வீடுகளை அடுத்து ஒரு சில காலி மனைகள். அவற்றுக்கு எதிரே ஒரு பெரிய இரண்டடுக்கு வீடு. அந்தச் சாமுண்டி நகரிலேயே பெரியதும், பார்ப்பவரின் கவனத்தை ஈர்ப்பதுமாயிருக்கும் வீடு இந்த வீடுதான். இன்றுதான் அதற்குக் கிரகப் பிரவேசம். வீட்டுச் சொந்தக்காரர் தில்லியில் பெரிய அரசாங்கப் பதவியிலிருந்து சமீபத்தில்தான் ஓய்வு பெற்றவராம். தில்லியிலிருந்த போது இங்குள்ள தம் நண்பர் ஒருவரின் முழுப் பொறுப்பில் இந்தக் கட்டடத்தை முடித்திருக்கிறார். கட்டட வேலை நடக்கும் போது ஓர் இரண்டு மூன்று தடவை வீட்டுக்காரர் வந்து பார்த்துக் கொண்டிருந்ததை ஹனுமந்தராவும் சுப்பராமனும் மற்றவர்களும் கவனித்திருக்கின்றனர். இவர்களும் நெருங்கிச் சென்று அவர் அருகில் நின்றபடி அந்தக் கட்டட வேலையைப் பார்ப்பார்கள். இவர்களைப் பார்த்து ஒரு சிறு புன்முறுவலோடு சரி. வேறு எதையும் இது வரை அந்த வீட்டுக்காரர் யாரிடமும் பேசியதில்லை. பேச்சு வார்த்தைக்கு இது வரை அவருக்கும் மற்றவர்களுக்கும் சந்தர்ப்பமே வாய்க்கவில்லை. மற்றவர்கள் தங்கள் சிறிய வீடுகளின் கிரகப் பிரவேசத்துக்கே பத்திரிகை அடித்துச் சுற்றமும் நட்பும் சூழ, பரிசுப் பொருள்களைக் குவித்து விருந்து படைத்தவர்கள்.

பெரிய வீட்டுக்காரரின் பெயர் மகாலிங்கம் என்பது மட்டும் தெரியும் எல்லோருக்கும். சிறிய வீட்டுக்காரர்கள் ஐந்து பேரும் சுப்பராமனின் தலைமையில் கும்பல் கூடி நின்று தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தனர்.

''வாய் உபசாரணைக்குக்கூட நம்பளையெல்லாம் அழைக்கலையே அவர்'' என்றார் சுப்பராமன். அவர்கள் பெரிய வீட்டையே உற்று உற்றுப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தனர்.

என்றாலும் ஒரு நாள் சுப்பராமனிடம், மகாலிங்கம் தேடி வந்து பேச வேண்டிய நேரம் வந்து நின்றது.

''எங்காவது நர்சரி ஸ்கூல் பக்கத்திலே இருக்கா ?'' என்று கேட்டார் மகாலிங்கம். இருப்பதாய்ச் சொல்லிவிட்டு. 'யாரைச் சேர்க்க வேண்டும்' என்று விசாரித்தார் சுப்பராமன்.

''பேரனை'' என்றார் மகாலிங்கம். தில்லியில் உள்ள தம் பேரனை இங்கே அழைத்து வந்து கொஞ்ச நாளைக்குத் தன்னோடு வைத்துக் கொள்ளப் போவதாய்க் கூறிய அவர் மெல்ல மெல்லத் தம்மைப் பற்றிச் சுப்பராமனிடம் சொல்லிக் கொண்டு, சுப்பராமனைப் பற்றியும், சாமுண்டி நகரைப் பற்றியும் ஓரளவுக்குக் கேட்டுக் கொண்டார்.

மகாலிங்கத்துக்கு ஒரே பிள்ளை. கனடாவில் டொரேண்டோ சர்வகலாசாலையில் பேராசிரியராயிருக்கிறானாம். ஒரு பெண். கல்யாணம் ஆகித் தில்லியில் இருக்கிறாள். இங்கே இவ்வளவு பெரிய வீட்டில் அவரும் அவருடைய மனைவியும் கூடமாட ஒப்புக்குச் சப்பாணியாய் ஓர் உறவுக்காரப் பெண்ணும் தான் இருக்கிறார்களாம்.

இந்த விவரங்கள் சுப்பராமன், ராவ் வீட்டுப் பெண்களின் மூலம் சாமுண்டி நகர் எங்கும் பரவியது.

காலனியில் உள்ள மத்தியதரக் குடும்பங்களின் பேச்சில் அடிக்கடி மகாலிங்கத்தின் விஷயங்கள் அடிபடத் தொடங்கின.

“என் பிள்ளை, பெண்ணெல்லாம் படிக்கறச்சே என்னோட ஆபீஸ் பியூன்களை கொண்டு போய் விட்டுட்டு வருவா. டிபார்ட்மெண்டிலே கார், குவார்ட்டர்ஸ் பியூன் எல்லாம் கொடுத்திருந்தா. இப்போ பேரனை நானே கொண்டு போய் நர்சரியிலே விட்டுவர்றது புது அனுபவமாயிருக்கு... போது

கமலாராவ்

போயாகணுமே...ரிடையர்டு லைப்'' என்றபடி தம் பேரனோடு நடந்து செல்லும் மகாலிங்கத்தையே ஹனுமந்தராவ் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்.

இந்த ஓய்வு வாழ்க்கை தமக்கு இதுவரை பரிச்சயமில்லாத கஷ்டத்தையும் தருவதை மகாலிங்கம் கண்டார். இலாகாவில் பெரிய அதிகாரியாக இருந்த காலத்தில், தமக்குட்பட்ட அதிகாரிகள், குமாஸ்தாக்கள், பியூன்கள் எல்லாரும் என்னமாய் வலிய வலிய வந்து உபசரித்துத் தம் சொந்த குடும்ப வேலைகளையெல்லாம் செய்து தந்தார்கள். இன்று தொட்டதெற்கெல்லாம் காசு. சின்ன வேலைக்குக்கூட இஷ்டத்துக்குக் கூலி கேட்கப்படுகிறது. தம்மைச் சுற்றி எதிலுமே நியாயம் இல்லை என்றே நினைப்பார் மகாலிங்கம்.

''ஆபீஸ்லே எல்லாரும் எல்லா வேலைகளையும் செய்துடுவா. நானும் ஒரு சுப்பீரியர் அத்தாரிட்டிங்கிற கெடுபிடியோட இருந்தவன் இல்லே. சகஜமானவன். ம், அவா அண்ணிக்கு ஆபீஸ் உறவோடேயே சொந்த வேலைகளிலே உதவினதுக்கு, உழைச்சதுக்கெல்லாம் கூலிக் கணக்குப் பார்த்தா, எவ்வளவு உழைப்பை அந்த உத்தியோக நாட்களிலே இலவசமா நான் வாங்கிண்டு வந்திருக்கேன்னு தோணறது ராவ்ஜி....'' என்று கம்மிய குரலில் கூறுவார் மகாலிங்கம். ஹனுமந்தராவ் மௌனமாய் அதைக் கவனிப்பார்.

அவருடைய பேரனைக் கட்டி மேய்க்க முடியவில்லை. வெகு சீக்கிரமே தில்லிக்குப் போய் விட்டுவிட்டு வந்துவிட்டார் மகாலிங்கம்.

'' சர்வீஸிலே இருக்கச்சே, என்னென்ன எண்ணெயா வந்து நிற்பானுங்க. ரிடையர்டு ஆன பின்னாடி எல்லாம் போயிடறது..... பென்ஷன் பேப்பர்களை இன்னும் சரி பண்ணாமே வைச்சிருக்காங்க. ரிடையர் ஆகி மூணு மாசத்துக்கு மேலே ஆச்சு, இன்னும் பென்ஷன் சாங்ஷன் ஆனபாடில்லே. ஏ. ஜீ.ஸ் ஆபீஸிலே போனா, இது சொத்தை, அது சொள்ளை, உங்க ஆபீசுக்குப் போயி திருத்தி வரணுங்கிறான். உள்ளங் காலிலே வெள்ளெலும்பு ஓடிது....'' என்று நொந்து கொண்டார் மகாலிங்கம். அவர் ஓய்வு பெற்றதிலிருந்து சிறிதும் ஓய்வேயின்றி அலைந்து வருவது எல்லோரும் பார்க்கும் ஒன்று.

''இன்ஃபாக்ட், நான் உத்தியோகத்தில் இருந்தேனே அதுதான் நான் ரிடையர்டு லைஃபிலே இருந்த மாதிரி இருந்தது. வலிய வலிய வந்து வேலை செய்ய கெஜெட்டடு ஆபீசருங்க, நான்கெஜட்டடு ஆபீசருங்க, பியூனுங்க, ஜீப், டிரைவர், ஸெர்வெண்ட்ஸ், ம்.... இப்போ இந்த ரிடையர்டு லைப்லே என்ன வாழுறதாம்'' என்று அடிக்கடி சொல்லிக் கொள்வார் மகாலிங்கம்.

ஒரு நாள் காலை.

குளியல் அறையில் ஏதோ கலாட்டா போலும். மகாலிங்கம் என்னவென்று அறியும் பொருட்டுச் செய்தித் தாளும் கையுமாய் வேகமாய்ப் போகையில் அவருடைய மனைவி வழிமறித்தாள்.

''என்னடிது லட்சுமி?'' என்றார் வியப்போடு.

'' வராதீங்கோ... உங்க அறைக்குப் போங்கோ'' என்று கத்தினாள் மாமி. பிறகு மிக மிக மெதுவாகக் கூறினாள்.

''அதில்லே, சாந்தா அவ பெரியவளாயிட்டா.... பஜாருக்குப் போயி ரெண்டு





**சைதாப்பேட்டை கோர்ட்டுக்கு முன்னால் ஒரு பிளாட்பாரக் கோயில் இருக்கிறது. அதன் பெயர்: 'வழக்கைத் தீர்க்கும் வலம்புரி வராகி வள்ளியம்மன் கோயில்.'**

— முத்து

செட், தாவணிப் பாவாடை வாங்கிண்டு, இதெல்லாமும் வாங்கிண்டு கருக்க வாங்கணேன்......'' என்றாள் மாமி.

''அட கர்மமே!'' என்று சத்தியமாகவே மனத்துக்குள் சொல்லிக் கொண்டார் மகாலிங்கம்.

''ராவ்ஜீ! உம்ம சைக்கிளைக் கொஞ்சம் இரவல் தருவீரா?'' என்று கேட்டுவிட்டுச் சைக்கிளில் ஏறும் போது ஹனுமந்தராவிடம் விஷயத்தையும் கூறினார் மகாலிங்கம்.

பெரிய வீட்டில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்த பெண் பெரிய மனுஷியாகி விட்ட விவரம் சாமுண்டி நகரில் பாதியளவுக்குத் தெரிந்துவிட்டது. அந்தப் பெண் கடைகண்ணிக்கெல்லாம் வெளியே போவதில்லை. அந்த வேலையையும் மகாலிங்கமே செய்ய வேண்டியதாயிற்று. விலைவாசியின் கொடுரத்தை அவர் நேருக்கு நேர் சந்திக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. ஒரு மாதத்துக்குப்பின் அந்தத் தெருவில் மாறுதல் ஒன்றைக் கவனித்தார் மகாலிங்கம். எதிர் வரிசையில் இன்னும் வீடுகள் கட்டப்படாதிருக்கும் காலி மனைகளைச் சாமுண்டி நகரின் இளைஞர்கள் பாட்மிண்டன் மைதானமாக மாற்றி, மூங்கில் நட்டு, வலை கட்டி விளையாடத் தொடங்கிவிட்ட காட்சி. காலை மாலைகளில் பெரிய வீட்டுக்கு, எதிரே பூப்பந்து விளையாடும் இளைஞர்களை. அவர்களையும் அந்த ஆட்டத்தையுமே மெய்ம்மறந்து ஜன்னலில் வேடிக்கை பார்க்கும் சாந்தா!

''அங்கென்ன வேடிக்கை, போ! மாமியை வரச் சொல்லு'' என்றார் மகாலிங்கம் ஆத்திரமாக.

தமக்குத் தெரியாமல் அந்த விளையாட்டுக்காரர்களை அந்தப் பெண் சாந்தா பார்க்கிறாள், பார்க்க முயல்கிறாள் என்பதை மகாலிங்கம் கவனித்தே வந்தார். இது அசிங்கமாய் முடியுமுன்னால் ஏதாவது செய்ய யோசித்தார்.

அந்தப் பெண்ணை அவள் அப்பனிடம் அனுப்புவது நரகத்தில் எறிவது போல. சாந்தாவின் அப்பன் ஒரு ஹோட்டல் தொழிலாளி. பெண் கெட்டுவிடுவாள். ஆனால் வயது வந்தவளை வீட்டுக்குள் எத்தனை நாள் வைத்திருப்பது என்று யோசித்தார் மகாலிங்கம். ஓர் அசாதாரணத் துணிச்சலுடன் தம் மனைவியிடம் கூறினார் இதை.

''சாந்தாவுக்கு நாமே வரன் பார்த்தால் என்ன?'' என்று கேட்டார்.

''கல்யாணச் செலவு?'' என்று விழி பிதுங்கினாள் மாமி.

''பார்க்கலாம்'' என்றார் மகாலிங்கம். பெண்ணின் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு அலைந்து திரிந்தார். சங்கர மடத்துக்குச் சென்று ஜாதகப் பரிவர்த்தனைக்கான வழிகளைத் தேடினார்.

இதனிடையில் சுப்பராமன் ஒரு பிரச்னையைக் கொண்டு வந்தார். ஒரு வாரத்துக்கு முன் ஹனுமந்தராவ் வீட்டுக்குத் திருடன் வந்துவிட்டுப் போயிருந்தான். கொஞ்சம் பாத்திரங்கள், உயர்ந்த துணிமணிகளைக் கொண்டு போய்விட்டான்.

''போலீஸ் பாயிண்ட் புக் ஒண்ணு போட வைக்கணும். போட்டுட்டா, தினம் ராத்திரி போலீஸ் வந்து பாரா கொடுத்துட்டு அந்தப் புஸ்தகத்திலே தான் பீட் கொடுத்ததுக்குக் குறிச்சிட்டுப் போவான். ஏரியாவிலே திருட்டு பயம் இருக்காது....'' என்றார் சுப்பராமன். மகாலிங்கத்தின் தலைமையை அவர்கள் நாடினார்கள். அவர் முன் செல்ல, மற்றவர் தொடர, எல்லோரும் காவல் நிலையத்தை அடைந்தனர்.

மகாலிங்கத்தின் வீட்டிலேயே போலீஸ் பாயிண்ட் புத்தகத்தைக் கட்டித் தொங்க விடும்படி ஹனுமந்தராவ் வேண்டினார்.

''என்ன, நீங்கதான் எல்லாத்திலேயும் பெரியவராச்சே. இந்தப் போலீசுக்கெல்லாம் கொஞ்சம் பெரிய இடமாயிருந்தா கொஞ்சம் ஒதப்பு இருக்கும். ஒழுங்கா பீட் வருவாங்க. பாயிண்ட் புக்லே எழுதுவாங்க. நாங்கல்லாம் சாதாரணம் பாரும். திருட்டைப் புடிக்கிறதுக்குக்கூடக் காக்காய் புடிச்சாத்தான் — நடக்கும்......'' என்றார் ஹனுமந்தராவ்.

போலீஸ் பாயிண்ட் புத்தகத்தைப் போலீசார் மகாலிங்கத்தின் வீட்டு வெளி போர்டிகோவில் கட்டித் தொங்கவிட்டனர். தினமும் தவறாது இரவு ஒரு மணி, இரண்டு மணி என்று போலீஸ் வண்டி வரும். ரோந்து சுற்றிவிட்டுப் போலீஸார் திறந்து கிடக்கும் ஜன்னல் வழியே டார்ச் அடித்து, கதவைத் தட்டி மகாலிங்கத்தை எழுப்புவார்கள். தூக்கம் கெட்டு முணு முணுத்தபடி வெளியே வரும் மகாலிங்கத்திடம் பாயிண்ட் புத்தகத்தில் எழுதிவிட்டுத் தங்கள் கடமையை உதறிவிட்டுப் போய்விடுவார்கள். மீண்டும் தூக்கம் வர நெடுநேரம் ஆகும். விடியும் வரையில் தூங்காமலே இருந்திருக்கிறார்.

சாந்தாவுக்கும் ஓரிடத்தைப் பிடித்துவிட்டார் மகாலிங்கம்.



**நம் வீட்டிலுள்ள மின்சார மீட்டர் சரியாக வேலை செய்கிறதா என்று பார்க்க ஒரு வழி: வீட்டிலுள்ள எல்லா விளக்குகளையும் அணைத்துவிட்டு ஒரே ஒரு 100 வாட் பல்பை மட்டும் எரிய விடுங்கள். அந்த பல்பு 10 மணி நேரம் எரியட்டும்: அப்படி எரிந்ததில் 1 அல்லது 1.1 யூனிட் மின்சாரம் ஆகியிருந்தால் மீட்டர் சரியாக வேலை செய்கிறது என்று அர்த்தம். இல்லாவிட்டால் ஏதோ கோளாறு!**

'பெமினா' — ஸரோஜா ராமச்சந்திரன்

# ஆஸ்துமா நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்புநாத் அவர்களின் பேரன் **ஸ்ரீ கேசவ் மோஹன் லால்** ஏழைகளுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை விநியோகிக்கிறார். ஸ்ரீ சம்புநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக விநியோகிக்கப் பட்டது. இத்தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த நற்பணியை அவர் தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப்பணியை பேரன் நடத்துவதோடு இதற்குப் பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவினால் அவதியுறும் பலர் நிவாரண மடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்கள் மூலிகைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

**SRI KESHAV MOHAN LAL**
8, HARALAL DAS LANE
(JORABAGAN PARK), CALCUTTA-6

---

1898
முதல் பிரசித்தி பெற்றது

பண்டிட் D. கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்கியத்திற்கும்
பலத்திற்கும்

## ஆயுர்வேதாஸ்ரமம்

பிரைவேட் லிமிடெட் - சென்னை-17

---

# அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்

## சிவ விஷ்ணு ஆலயம்

### தியாகராயநகர் – சென்னை-17

ராக்ஷச ஆண்டு தை மாதம் 23ம் தேதி (6-2-76) வெள்ளிக்கிழமை காலை 6-30 மணி முதல் 7-40க்குள். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் முன்னிலையில், மஹா கும்பாபிஷேகம் விமரிசையாய் நடைபெறும். பிரத்யேக இட வசதி உண்டு. இக் கைங்கரியத்தில் எல்லோரும் கலந்து கொண்டு பொருளுதவி செய்ய வேணுமாய்க் கோருகிறோம்.

கும்பாபிஷேக ஞாபகார்த்தமாக யாகசாலை பூஜையில் வைத்த வெள்ளிக் காசுகள் ரூ. 15/- செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

தியாகராயநகர்
19-1-1976

பாரம்பரிய தர்மகர்த்தா
எம். எஸ். எஸ். ஸபா

# இப்போது! மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.



புதுமை மயம்.
பேரதிசயம். லிரில்.
புத்துணர்வு சோப்.
மலையருவி அலைபுரளும்
ஜாலம். ஆலோலம்.
அலையெறியும்
தளதள பச்சை.
அதன் நயமோ
குளுகுளு எலுமிச்சை.
பொங்கிப் பீறிடும்
நுரைவளம். லிரில்.
புதுக் குமரியாய்
உங்களைப்
பூரிக்க வைக்கும்.







## லிரில்

புத்துணர்வு சோப்

**கிளுகிளு புத்துணர்வில் குளித்தெழ**

மகாராஷ்டிரம், குஜராத்,
மத்தியப் பிரதேசம், தமிழ்நாடு,
ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம்,
கேரளம் ஆகிய மாநிலங்களில்
மட்டுமே கிட்டும்.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LR. 13C-140 TM



**இப்பொழுது விபத்து நடந்திருக்கும் 'சாஸ்நலா' சுரங்கத்தில் தண்ணீர் புகுந்து விபத்து ஏற்படலாம் என்று ஒன்பது மாதங்களுக்கு முன்பாகவே மத்திய சுரங்க ஆராய்ச்சிக் கழகம் தனது சந்தேகத்தைக் கூறி யிருந்தது.** டெக்கான் ஹெரால்ட்-கே. ஆர்.

---

''ஏதோ கோயிலுக்கு எழுதி வைச்ச மாதிரின்னு நினைச்சுக்கோயேன்....'' என்று மனைவியிடம் சொன்னார் அவர்.

அந்தப் பெண்ணுக்கு மகாலிங்கம் செலவு செய்து திருப்பதியில் கல்யாணம் செய்து முடித்துவிட்டார்.

ஒரு புத்துணர்ச்சியூட்டும் செய்தி கிடைத்தது. அவருடைய பிள்ளை கனடாவிலிருந்து வருகிறான்.

''ராஜு, வர்ரான்டி... ராஜு வர்ரான்.''

''ராஜு வர்ரானா ?''

ஆம், அவருடைய மகன் ராஜு, மருமகள் ராதா, குழந்தை எல்லோரும் வந்து சேர்ந்தனர். அல்லோலகல்லோலப்பட்டது. பெரிய வீடு. மகாலிங்கம் புதிய உற்சாகத்தோடு மகனுக்கு ஜோடியாக இளமைத் துடிப்புடன் ஓடியாடி வந்தார். இது இப்படி ஒரு வாரத்துக்குத்தான். ராஜு தன் மாமனார் வீட்டுக்குப் போய் ஒரு வாரம் இருந்து வருவதாகப் புறப்பட்டான். பத்து நாட்கள் கழித்தே திரும்பினர். மகாலிங்கம் கொஞ்சம் வேதனையுடன் இருந்தார். இரண்டு நாட்கள் கழித்து ராஜுவைத் தேடி அவனுடைய தோழர்கள் பலர் வந்தனர். ஒரு சிலர் தாங்களும் கனடாவில் வேலை தேடி வருவதாய்க் கூறி அவனிடம் அதற்கான யோசனைகளைக் கேட்டனர். அவர்களின் வீட்டுக்கு விருந்தினராய் வந்திருக்க ராஜுவையும் அவன் மனைவியையும் அழைக்க, அவர்களும் புறப்பட்டனர். குழந்தையை மட்டும் மகாலிங்கத்திடமே விட்டுச் சென்றனர். அது சரியான அழுமூஞ்சி வர்க்கம். இரண்டு நாட்கள் கழித்தே திரும்பினர் மகனும் மருமகளும். மகாலிங்கம் குன்றிப் போய் உட்கார்ந்திருந்தார்.

''இந்தப் பெரிய வீடு ஒரு சத்திரம். இதிலே எல்லாருக்கும் ஓய்வு வேண்டியிருக்கு. அதுக்கோசரம் வர்ரா, போரா'' என்றார் மகாலிங்கம். ஹனுமந்தராவுக்கு அவரைப் பார்க்கப் பொக்கென்றிருந்தது.

''ஆயிரக்கணக்கான மைல் தூரத்திலிருந்து வந்திருக்கான். சேர்ந்தாப்பலே ஒரு பதினைஞ்சு நாளைக்காவது அப்பன் பக்கத்திலேயே இருந்து, அவரை விசாரிச்சு சந்தோஷப்படுத்தாமே அந்தப் பிள்ளையாண்டான் நண்பர்கள் வீட்டிலே இரண்டு நாள், மாமனார் வீட்டிலே பத்து நாள்னு போயிருக்கானே. பெரியவர் மனசிலே உளைச்சல். ஒரே பிள்ளை வேறே...ஏதோ டூர் வந்திருக்கிற மாதிரியில்லே இருக்கு....'' என்று சுப்பராமனின் வீட்டில் பேசிக் கொண்டனர். ஹனுமந்தராவ் வீட்டிலும் இதே வார்த்தைகள்தாம் பேசப்பட்டன...

விடுமுறை தீர்ந்தது என்று மகாலிங்கத்தின் மகனும் மருமகளும் வந்தது போலவே டாக்சி வரவழைத்து விமான நிலையம் புறப்பட்டு விட்டனர். இந்தக் கசப்பான நினைவுகள் எல்லாம் திரவேயில்லை மகாலிங்கத்துக்கு.

''பாரும் ராவ்ஜி! உத்தியோகத்திலே இருக்கச்சே, நேரம் சரியாயிருக்கும். ஃபைல்களைப் பார்க்க அரை நாளாகும். ஆர். கே. மகாலிங்கம், ஆர். கே. மகாலிங்கம்னு அம்பு பாயற மாதிரி கையெழுத்தா கிழிச்சுக்கிட்டேயிருப்பேன். அப்புறம் இன்ஸ்பெக்ஷன், மீட்டிங்கு எல்லாம். வேறே யோசனைகளுக்கு இடமே இல்லாதபடிக்கு மனசு பூரா ஆபீசா நிரம்பிக் கிடக்கும். இப்போ மனசிலே வெற்றிடம். அங்கே அப்பனும் மகனும் மருமகளும் தேங்கிக் கிடக்கிறாங்க. உத்தியோக நாளாக இருந்திருந்தால் இது மாதிரி சந்தர்ப்பங்களை மறந்திவிட்டிருப்பேன். யோசிச்சுக்கிட்டிருக்கவே நேரமிருக்காது. எனக்கென்னவோ மனசைப் பொறுத்தளவு அப்போதான் எனக்கு ஓய்வு கிடைச்சது. இப்போ ஆத்மார்த்தமா ஓய்வே இல்லே.....'' என்று கூறும்போது மகாலிங்கத்தின் கண்கள் கலங்கின.

ஒரு நாள் மகாலிங்கம் சந்தோஷத்தோடு ஹனுமந்தராவின் வீட்டுக்கு ஓடி வந்தார்.

''யுரேகா மிஸ்டர் ராவ், யுரேகா.......

எனக்கு ஒரு வழி கண்டு பிடிச்சுட்டேன்.....'' என்று கத்தினார் மகாலிங்கம். ஒன்றும் புரியாது விழித்தார் ஹனுமந்தராவ்.

''இந்தப் பெரிய வீட்டை ரெண்டு போர்ஷனா ரெண்டு குடும்பத்துக்கு வாடகைக்கு விட்டுடப் போறதா முடிவு பண்ணிட்டேன். ஒரு போர்ஷனுக்கு ஆளும் கிடைச்சாச்சு. நானும் என் ஒய்ஃபும் என் மகளோட டில்லியில் போய் இருந்துடப் போறோம். மாப்பிள்ளைக்குப் போன வாரம் எழுதினேன். உடனே புறப்பட்டு வந்துடச்சொல்லி லெட்டர் வந்திருக்கு. ஆகவே, இன்னொரு போர்ஷனுக்கு ஆள் வேணும். நல்ல குடும்பமாகச் சிபாரிசு பண்ணுங்கோ...'' என்றார் மகாலிங்கம். ஒரு மாதமாய்க் கறுத்த அவருடைய முகம் களை கட்டியிருந்ததை ராவ் கவனித்தார்.

''அதுக்கென்ன ஒரு ஆபீசருக்கு வீடு வேணுமா யிருக்கு.... நாளைக்குச் சொல்றேன்'' என்றார் ஹனுமந்தராவ். மகாலிங்கம் நன்றி கூறிவிட்டுப் போனார்.

சாமுண்டி நகரில் பேசுவதற்குப் புதிய புதிய விஷயங்கள் கிடைத்துக் கொண்டேயிருக்கின்றன.

பெரிய வீட்டில் பல நாட்களுக்குப்பின் ஒரு விசில் ஒலி. ஹனுமந்தராவ் கூர்ந்து கவனித்தார். மகாலிங்கம்தான்! உற்சாகத்தோடு ஏதோ டியூனை விசிலடித்தபடி குளியல் அறையில் குளிக்கிறார் என்பது தெரிந்தது. போர்ஷன் வாடகை விஷயத்தை மறக்காதிருக்கச் சின்னக் காகிதத்தில் குறித்துப் பர்சில் வைத்துக் கொண்ட ராவ் ஆபீசுக்குப் புறப்படத் தயாரானார்.

# உங்கள் குடும்பத்தின் ஆரோக்கியத்திற்கு வைட்டமின்களும் தாதுப் பொருள்களும் இன்றியமையாதவை




## அவை போதுமான அளவில் கிடைக்கின்றனவா?

அவை கிடைக்கின்றன என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளத் தினம் குடும்பத்தினர்க்குத் தருவீர் விம்க்ரான். நாள் முழுதும் குடும்பத்தினர் சிறப்பாகச் செயல்பட, உடலுரத்துடன் உற்சாகம் பெற வைட்டமின்கள் மற்றும் தாதுப் பொருட்கள் அளிப்பன விம்க்ரான்!

# விம்க்ரான்®

பல்வேறு வைட்டமின்-தாதுச் சத்து மாத்திரைகள்
11 வைட்டமின்கள் — 8 தாதுப் பொருட்கள்

Ⓡ® SQUIBB®
SARABHAI CHEMICALS LTD.



Ⓡ இ. ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேட்டட் அமெரிக்க ரெஜிஸ்டர்ட் ட்ரேட்மார்க்குகள். எஸ்.ஸி.எல். இவை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

ஒரே ஒரு விம்க்ரான் மாத்திரை உங்களை நாள் முழுதும் சக்தியுடன் வைத்திருக்கப் போதுமானது

Shilpi-SC-2A/75 tam

---

அருள்மிகு அண்ணாமலையார் திருப்பணிக் குழு, திருவண்ணாமலை

வட ஆற்காடு மாவட்டம்

## மகா கும்பாபிஷேகம்

அருள்மிகு உண்ணாமுலை உடனுறையே அண்ணாமலையார் திருப்பணி வேலைகள் பூர்த்தி செய்யப் பெற்று மகா கும்பாபிஷேகம் நாளது ராக்ஷச வருடம் பங்குனி மாதம் 22-ம் நாள் (4-4-1976) ஞாயிறு காலை 8-15 முதல் 9 மணி வரையில் ரிஷப லக்னத்தில் நடைபெறுகிறது. தமிழ் நாட்டில் இதுவரையில் நடைபெறாத முறையில் மிகச் சிறப்பான முறையில் யாக குண்டங்கள் அமைக்கப்பெற்று 200 தேர்ச்சி பெற்ற சிவாச்சாரியர்கள் கலந்து கொள்ளுகிறார்கள். மகா கும்பாபிஷேகம் முடிந்து 5-4-76 முதல் 48 நாட்களுக்கு மண்டலாபிஷேகம் நடைபெறும். அபிஷேகத்தில் பங்குபெற விரும்புவோர் நாள் ஒன்றுக்கு ரூ. 250/- கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி தங்கள் பெயரைப் பதிவுசெய்து கொள்ளலாம்.

செயலாளர்

அருள்மிகு அண்ணாமலையார்
திருக்கோயில், திருப்பணிக்குழு
திருவண்ணாமலை, வ. ஆ.

டி. வி. சுப்பிரமணிய செட்டியார்
உப தலைவர், திருப்பணிக்குழு

---

சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கும் வைத்தியத்திற்கும்

# லலிதா பார்மஸி

ஆர்ய வைத்ய சாலை

எமது பிரதம டாக்டர் வி. ஆர். வைத்தியநாத சர்மா அவர்கள் எமது சென்னை பிராஞ்சுகளுக்கு, கீழ்க்கண்ட தேதிகளில் விஜயம் செய்து வைத்திய ஆலோசனை அளிப்பார்கள்.

1. 1-2-76
நெ. 6, ரெங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை-600017
போன்: 441454

2. 2-2-76
60-B, கச்சேரி ரோடு,
மைலாப்பூர், சென்னை-600004
போன்: 73007

வைத்திய ஆலோசனை நேரம்:
காலை 8 to 11, மாலை 4 to 7

குறிப்பு: எமது டாக்டர் பிப்ரவரி மாதம் சென்னையில் மேற்கண்ட எமது பிராஞ்சுகளில் ஒவ்வொரு நாள்தான் தங்கி வைத்திய ஆலோசனை அளிப்பார்.



# அலுவலகத்தில்

ஒரு வயோதிக வாடிக்கையாளருக்கும் இளம் மானேஜருக்குமிடையே நடந்த உரையாடல்:

''எப்படி தம்பி நீ இத்தனை இளம் வயதில் மானேஜரா யிருக்கிறாய்?''

''என்னுடைய உழைப்பு ஒரு காரணம்.''

''அப்புறம்?''

''என் திறமை, நாணயம், தன்னம்பிக்கை உற்சாகம்....''

''இன்னும் ஏதாவது காரணம் உண்டா?''

''உண்டு.''

''என்ன அது?''

''என்னுடைய அப்பாதான் இந்தக் கம்பெனிக்கு முதலாளி!''



''நாலு பேர் செய்யும் வேலையை இந்தக் கம்ப்யூட்டர் செய்யும் என்று சொல்லித்தானே நம் மானேஜர் அதை வாங்கினார். பின்னே ஏன் டைரக்டர்கள் முகத்தைச் சுளித்துக் கொள்கிறார்கள்?

''இந்தக் கம்ப்யூட்டரை இயக்குவதற்கு நாற்பது பேர் தேவையாயிருக்கிறதாம்!''



''மாதத்துக்கு நூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்த நான் அதை இரட்டிப்பாக்கித் தராவிட்டால் வேலையை விட்டுப் போய்விடுவதாகப் பயமுறுத்தினேன். உடனே பணிந்து விட்டார்கள்.''

''அப்படியா? என்ன செய்தார்கள்?''

''இனி மேல் இரண்டு மாதங்களுக்கு இருநூறு ரூபாய் தருவதாக ஒப்புக் கொண்டு விட்டார்கள்!''



கம்பெனி முதலாளியிடம் ஓர் அலுவலக இளைஞன் வந்தான். ''சார்! நானும் உங்கள் பெண்ணும் கல்யாணம செய்து கொள்வது தான் இப்போது ஒரே வழி.''

கொஞ்சம் யோசித்து விட்டு மானேஜர் சொன்னார்:: '' ஓகோ விஷயம் அவ்வளவு தூரத்துக்குப் போய் விட்டதா? இப்போது என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?''

''அவளை எனக்குக் கொஞ்சம் அறிமுகம் செய்து வைக்கச் சொல்கிறேன்!''



''என்ன சார் இது? ஆச்சரியமாக இருக்கிறதே! வீட்டு வாடகை கொடுக்கிறீர்கள். போக்குவரத்துப் படி தருகிறீர்கள். போனஸ் உண்டு, பிராவிடண்ட் பண்ட் உண்டு. வருடத்தில் இரண்டு மாதம் லீவு உண்டு என்றால் ஏன் யாரும் இந்த வேலையை இதுவரையில் எடுத்துக் கொள்ளவில்லை?

''அவர்கள் சம்பளம் வேறு வேண்டுமென்று கேட்டதற்கு நாங்கள் ஒப்புக் கொள்ளாததால்தான்!''



''எப்போதும் எனக்கு ஆபீசில் வருடத்தில் இரண்டு முறை விடுமுறை உண்டு.''

''எப்படி?''

''நான் 'லீவில்' போகும்போது ஒருமுறை; என் மானேஜர் லீவில் போகும்போது ஒரு முறை!''

**உ**லகைப் பயமுறுத்துகிற யுத்தம் இருக்கிறவரை மனித சமுதாயத்துக்கு அமைதி ஏது? உலகிலிருந்து யுத்தத்தை விரட்ட அறிவு எத்தனையோ மந்திரங்களை ஜபிக்கிறது. பயன்? உலகில் யுத்தமிருந்தால் தானே! யுத்தத்தினுள் அல்லவா உலகம் உழல்கிறது: அல்லது உறங்குகிறது!

பாரதத் தலைநகரங்களில் படாத பாடு கண்டு பட்ட தலைநகரம் தில்லியாகத்தான் இருக்க





# கங்கை நதியின் சூன்யக்காரி

## கோவி. மணிசேகரன்

முடியும்.

அது கண்ட யுத்தங்கள்தாம் எத்தனை! கொண்ட பித்தங்கள்தாம் எத்தனை! பொழுது விடிந்து விட்டால் எந்த நேரம் போர்க் குரல் கேட்குமோ! பொழுது மடிந்து விட்டால் எந்த நேரம் பூவையார் அலறல் வெடிக்குமோ? உலக யுத்தங்களின் அநாகரிகங்களும், உல்லாசபுரிகளின் அவலட்சணங்களும் பிரதிபலித்த யமுனைக் கரை. இன்னமும் புனிதமாகத்தான் ஓடிக்கொண்டிருக்கிறது. யமுனைதான் என்ன செய்வாள்? இமயம் உயர்ந்த அளவுக்கு மனிதர் உயர நாணப்படுகின்றனரே!

தீமை சதவிகிதத்தில் ஏறிக் கொண்டிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுவது போல் அழகுப் பைசாசம் தேவல் தேவியின் கலகலத்த வெறிச்சிரிப்பு வேதனை கலந்த அநாகரிகச் சிரிப்பு அந்தப்புரத்தை நாற்றமடிக்கச் செய்து கொண்டிருந்தது. தோழிப் பெண்கள் பயந்து பட்டடத்துப் பக்கவாட்டில் மறைந்து காணப்பட்டனர். வெளியே இன்னும் போர் அடங்கவில்லை. பயங்கரமான கூச்சல்கள்; ஆயுதங்களின் சலசலப்புக்கள்; பீரங்கிகளின் வெடிச் சத்தங்கள். அக்நுனைக்கு ஒரு வார காலமாக வெளியே புரட்சி ரத்த வெள்ளமாகப் புரண்டு கொண்டிருந்தது. புதியதாகத் தில்லி அரியாசனம் ஏறிய மாலிக் குஸ்ருகான் வீழ்வானோ, அல்லது புரட்சி வித்துக்கு நீரூற்றக் கிளம்பிய காஜி மாலிக் துக்ளக் மாள்வானோ என்கிற எதிர்பார்ப்பு மக்களிடையே!

அவ்வப்போது ராணுவுக்கு — அந்தப்புரத்துக்குச் செய்தி வந்தவண்ண மிருந்தது. அலங்கார அலங்காரி — அரியணை வேஷதாரி — அதர்மத்தின் சிங்காரி தேவல்தேவி இஸ்லாமிய ஒப்பனைக் கோலம் தரித்து வெகு நேரமாய் விட்டது. அவளுக்குத்தான் என்ன நெஞ்சழுத்தம்! மாலிக் குஸ்ருகான் தோற்று விடுவான் என்று எத்துணைக்குத் துணிவாக முடிவு செய்து விட்டாள்!

சலீமா ஓடோடி வந்தாள். அவளுடைய கண்களில் மருட்சி அலைமோதியது.

''என்னடி சலீமா யுத்தத்தின் நிலை பற்றிச் செய்தி கிடைத்ததா?'' — கங்கை நதியின் சூன்யக்காரியான தேவல் தேவியின் இரும்பு நாக்கு அசைந்தது.

சலீமா சொன்னாள்: ''மன்னர் மாலிக் குஸ்ருகான் வேகமாக வந்து கொண்டிருக்கிறார்.''

''வெற்றியுடனா? தோல்வியுடனா?''

''தெரியவில்லை. ஆனால் வெறியுடன் வந்துகொண்டிருக்கிறார்.''

அஞ்சாத அழகுப் பேய் தேவல் தேவியும் ஒரு கணம் அதிர்ச்சியுற்றாள்.

**நா**ன்கு மாதங்களுக்கே நாயகனாக ஒருவன் தில்லி அரியணையில் ஏறினான். இது ஒரு விந்தையான சரித்திரம்; ஆனால் வேதனை நிறைந்த ஓர் அடிமையின் சரித்திரம்; வேரூன்றிய கில்ஜி பரம்பரையையே ஆட்டி அடியோடு புதைத்த வேடிக்கைச் சரித்திரம் கூட!

அலாவுதீன் கில்ஜியின் மூலம் ஆரம்பமான அந்தப் பரம்பரை ஆட்சிக்கு நரைத்தான் என்கிற வீரன், ஒரு மாலிகாபூரைத்தான் பரிசாகத் தந்தானே; ஒரு நாசகாரி கமலா தேவியையுமா வெகுமதியாகத் தர வேண்டும்? அவள் அலாவுதீனைமட்டும் ஆட்டி வைத்தாள்! அவள் திருமகள் தேவல் தேவியோ அந்தப் பரம்பரையையே ஆட்டி வைத்தாள்; வீழ்த்தி வைத்தாள்! இந்து வமிசத்தில் வந்த இராட்சஸியான அவளைப் பெற்றெடுத்த குஜராத் மண் கூனிக் குறுகியது! அவளுடைய கதை நைல் நதியின் சூனியக்காரியான கிளியோபாத்ராவைவிட மிகவும் அசிங்கமானது! மாவீரன் — அக்காலத்திலேயே ஒரு புதிய அவசரச் சட்டம் பிரகடனப்படுத்திய அஞ்சாநெஞ்சன் அலாவுதீன் கில்ஜியைத் தேவல்தேவியின் தாய் மாய்த்தாள்; பிள்ளைகளைக் கமலா தேவியின் மகள் வீழ்த்தினாள்! அந்த மகள் — தேவல் தேவி — களம் பல கண்ட மாலிகாபூரையே மண்டியிடச் செய்து விட்டாள் என்றால், பின்னால் வந்த குதுப்தீன் முபாராக் ஷாவோ, அவளை வீழ்த்திய அடிமை வீரன் — தளபதி குஸ்ருகானோ எந்த மூலை? இத்தனை பேருக்கும் இந்த ஒரே அழகி — ஒப்பற்ற அழகிதான் என்பதை விட, இத்தனை காமப் பலவீனர்களும் இவளுடைய காலை வருட, நாட்டின் காலை வாரி விட்டவர்கள்! ஒரு வம்சத்தையே வீழ்த்தி விட்டவள், இன்னொரு வமிச உதயத்தையும் அதன் வீழ்ச்சியையும் எதிர்பார்த்தே வேஷம் தரித்துக் கலகலவென்று சிரித்து எதிர்பார்த்தாள்!

''ஷாயின்ஷா! என் தலைவா! இந்த அழகுப் பைசாசம் தேவைதானா? பேசாமல் நாடு கடத்திடுங்கள்!'' இப்படி எடுத்துச் சொன்னவனும் இடித்துக் கூறியவனும் குஸ்ருகான்தான். அப்போது அவன் உண்மையான விசுவாசி; உன்னதமான தளபதி. இத்தனைக்கும் குஸ்ருகான் ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பினன். வீரத்தால் படிப்படியாக முன்னேறியவன். அலாவுதீன் கில்ஜிக்குப் பிறகு அவனுடைய இனிய மகன் முபாரக் ஷாவாவது தில்லியின் ஆட்சியைச் செம்மைப்படுத்த மாட்டானா என்பது குஸ்ருகானின் எதிர்பார்ப்பு.

தேவல் தேவியின் தேன் குளத்தில் நீராடிப் போதை தலைக்கேறி அறிவுக்குருடாகிய மன்னன் முபாராக் ஷா செவி சாய்க்கவில்லை. நேரே அந்தப்புரத்துள்ளேயே நுழைந்து விட்டான் குஸ்ருகான். அவனுக்கு அத்தகு அதிகாரங்கள் பல வழங்கப்பட்டிருந்தன.

என்றுமே வராத மாவீரத் தளபதி குஸ்ருகான், இன்று பார்த்து அந்தப் புரத்துக்கு வந்தது கண்டு வியந்தாள் பேர்ழைக் கன்னி தேவல் தேவி.

''வாருங்கள் குஸ்ரு! தேவல் தேவியைச் சந்திக்க வேண்டும் என்கிற எண்ணம் எப்போது உதயம் கண்டதோ, அப்போதே உங்களுக்கு ஓர் அதிர்ஷ்டம் காத்துக் கொண்டிருக்கிறது என்பதாகத்தான் அர்த்தம்!''

தேவல் தேவியின் வரவேற்பு கண்டு ஒரு கணம் அதிர்ந்து போனான் குஸ்ருகான்.

''மகாராணி ஒரு விண்ணப்பம்! நாட்டின் நலம் கருதிப் பேட்டி காண வந்தேன்.''

''நாட்டின் நலம் என் நலம் அல்ல; என் நலம் நாட்டின் நலம். விண்ணப்பத்தைச் சொல்லலாம்.''

''மகாராஜா முபாராக் ஷாவை நாடாள விடுங்கள்!''



ஸ்டேஷன் மாஸ்டர்: ஏம்மா! அந்த ரயில் எத்தனை மணிக்கு வரும், இந்த ரயில் எத்தனை மணிக்கு வருமுன்னு பத்து நிமிஷமா என் உயிரை எடுத்திங்களே, எந்த ஊருக்குப் போறதா உத்தேசம்?

பெண்: எந்த ஊருக்கும் இல்லீங்க. ரயில்வே லைனைக் கிராஸ் பண்ணி அந்தப் பக்கம் போகணும். அதனால் கேட்டேன்.

— சரஸ்வதி பஞ்சு

ooooooooooooooooooooooooooooooo

''பின் அவர் நங்கையர்களையா ஆள்கிறார்?''

''அப்படித்தான் தெரிகிறது!''

''ஓ. அப்படியானால் நங்கை நாடாளுகிறாள் என்பது புரியவில்லையா?''

''அளந்து பேசுங்கள்; நான் குஸ்ருகான்!''

''உங்களை நீங்கள் அளந்து பார்த்துப் பேசுங்கள். நான் தேவல்தேவி!''

குஸ்ருகான் மீண்டும் மருண்டான்.

''குஸ்ரு! நீங்கள் ஓர் அடிமை. மால்வாவின் ராஜபுத்திர ரத்தம் உங்களுடலில் ஓடுகிறது. ஆனாலும் சுய பெயரை மாற்றிக் கொண்டு, சுதந்திரத்தை இழந்து, மதம்மாறி இப்போது குஸ்ருகானாகி யிருக்கிறீர்கள். ஆனால் உங்களுள் அடிக்கடி தலைநீட்டும் இந்த ரத்தத்தை நானறிவேன். நான் மட்டும் யார்? இப்போது இஸ்லாமிய உடையில் முகமதிய ராணியாக இருந்தாலும் தேவல் தேவி என்கிற பெயர் மாறி ஜஹானாரா பேகமாகி விடவில்லையா? என்னைக் காதலித்த கிஸ்ரா கான் முதல் முபாரக் ஷா வரை பார்த்தவள்! உங்களிலே சிறந்த மாவீரத் திலகம் மாலிகாபூருக்கு மகாராணியாக இருந்தவள்! ஏன்? ஏன்? உங்களை மனத்தில் வைத்துத்தான்!''

மறுபடியும் மருண்டான் குஸ்ருகான்!.

சாளரங்கள் திறந்து விடப்பட்டன. இதமான காற்று நுழைந்தது.

''காற்று எவ்வளவு சுதந்திரமாக நுழைகிறது பார்த்தீர்களா குஸ்ரு! காரணம் சாளரங்கள் திறந்து விட்டதால்! புரிகிறதா!''

''.........''

''அடிமை, தளபதியானது ஆச்சரியமில்லை. அரசனாக வேண்டும். உங்கள் இஸ்லாமிய கோலம் கலைய வேண்டும். இந்து பிறப்பின் சுயரூபம் தெரிய வேண்டும். நானும் ஒரு இந்துப் பெண்! இருவருமாகச் சேர்ந்து தில்லியை மீண்டும் இந்து சமயமாக்கிப் பழைய நிலைக்குக் கொண்டு வர வேண்டும்.''

''.........''

''தயங்கிப் பயனில்லை, குஸ்ரு! தவமிருந்தேன்; தருணம் பார்த்தேன்; உங்களையும் எதிர்பார்த்தேன். நேரம் வந்து விட்டது. வேஷம் கலையலாம் அல்லவா?''

புத்தி புகட்ட அந்தப்புரத்துள் நுழைந்த குஸ்ருகான் புத்திமதிகளுடன் வெளியேறினான். இதன் பயன்?

செல்வமான சித்திரைத் திங்களில் — கி.பி. ஆயிரத்து முந்நூற்றி இருபதில் — தில்லி மன்னன் முபாரக் ஷா கொலையுண்டான்! நாஸிர் உதீன் மாலிக் குஸ்ருகான் என்ற பட்டப் பெயருடன் அடிமைத் தளபதி அரியணையேறினான். பட்டத்து ராணி....

தேவல்தேவிதான்!

**மா**லிக் குஸ்ருகான் பட்டத்தில் அமர்ந்த இரண்டாம் மாதமே தில்லிமா நகரமும்-சுற்றுச் சூழ்ந்த இஸ்லாமிய அரசுகளும் - கொதிப்பில் ஆழ்ந்து விட்டன. இஸ்லாமிய ஆட்சியால் வண்ணக் கோலம்பூண்ட தில்லிமா நகரம், இப்போது இந்துக்களின் எண்ணக் கோலமாகிய நிலை, வேதனையை அளித்தது. அதுவும் பரம்பரையான ஓர் இந்து அரசன் தலைதூக்கி ஆண்டாலும் பரவாயில்லை. பாதியில் வந்த ஒரு தாழ்த்தப்பட்ட அடிமையாள்வதா?

தில்லியில் பல்வேறுபட்ட அதிகாரிகள் - இரவுதோறும் கூடிச் சதியாலோசனை புரிந்தார்கள். தீபல்பூர் ஆளுநன் காஜிபக் துக்ளக் துணை வேறு கிடைத்தது. நான்கே மாதங்களில் புரட்சிக் கொடி தூக்கி விட்டார்கள். அந்தப் புரட்சிக் கொடியின் பயனாகத்தான் யுத்தம் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது.

குஸ்ருகான் தோற்றான். அவனுடைய கடைசி ஆசை — தேவல் தேவியுடன் எங்கேயாவது ஓடிப் போய்விட வேண்டும் என்பது. ஆனால் தீபல்பூர் ஆளுநன் காஜிபக் துக்ளக் வீரர்களுக்கு இட்ட ஆணை......

'கட்டழகி தேவல் தேவியைக் கடியாமல் கசங்காமல் ஒப்படைக்க வேண்டும்' என்பது. இதனை எப்படித்தான் துப்பறிந்தாளோ தேவல்தேவி. இல்லையென்றால் அதுவரை இந்து உடையில் இருந்தவள் அப்போது இஸ்லாமிய ஒப்பனைக்கு ஆயத்தமாகி இருப்பாளா?

ஆவேசத்துடன் அந்தப்புரத்துள் நுழைந்த மாலிக் குஸ்ருகான், தேவல் தேவியின் மாறுபட்ட அலங்காரத்தைக் கண்டு அப்படியே அசையாமல் சிலைத்து விட்டான்.

''வெற்றி யார் பக்கம்?'' — தேவல்தேவி கடுமையாகக் கேட்டாள்.

''காஜிபக் துக்ளக் சூழ்ச்சியால் என்னை வென்று விட்டான்.''

''ஓ...அப்படியா! மாலிகாபூரை நீ வென்றது போல! ஓடிவிடு! தூக்கிலிடுவதாகத் திட்டம். உன் நன்மைக்கு இதையறிந்து சொல்கிறேன்'' — நாவில் ஒருமை உறவாடியது.

''நீ?''

''உன்னுடன் ஓடி வந்தால் ஒரு பயனுமில்லை. ஓடித் தப்பித்துக் கொள். உம்! பின்னால் சந்தர்ப்பப்பட்டால் என் உதவி பயன் தரலாம்!''

தேவல் தேவி சிரித்தாள்.

''யமுனைக்கரைக்கு ஒரு சூனியக்காரி தேவையில்லை. பின்னால் வருகிற காஜிபக் துக்ளக்குக்கு நீ கெடுதல் செய்யாமல் இருக்க வேண்டும் என்பது ஒருபுறம்; அவன் வம்சமாவது கெட்டு நொந்து போகாமல் இருக்க வேண்டுமே என்பது மறுபுறம். நீ ஒரு கால நாகம்! முதலில் இந்த நாடு தப்பிக்கட்டும்'' என்று கூறிக் கொண்டே வாளையுருவிப் பாய்ந்தாள் குஸ்ருகான். அவனுடைய ஆவேசத்தின் பயனாக ஒரு பைசாச அழகு விருட்சம் வீழ்ந்தது!



டாக்டர் லக்ஷ்மி சதுர்வேதி அவர்கள் குமாரத்தி சௌ. **பிரேமாவுக்கும்,** சென்னை. டாக்டர் T. S. துரைஸ்வாமி *(Eye Surgeon)* அவர்கள் குமாரன் சிரஞ்சீவி **T. D. சதாசிவனுக்கும்** சென்னையில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



சென்னை, ஈசன் இன்ஜினீயரிங் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ *K. V.* வெங்கடேஸ்வரன் அவர்கள் புதல்வியும் திருநெல்வேலி கல்கி ஏஜெண்டின் மருமானுமான செல்வி **ராதாவுக்கும்,** ஸ்ரீரங்கம் ஸ்ரீ *R.* நாராயணஸ்வாமி அவர்கள் குமாரன் சிரஞ்சீவி **என், கல்யாணராமனுக்கும்** சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்



''திருச்சி அகத்தியர் புத்தகசாலை உரிமையாளர் ஸ்ரீ வி. சுப்பிரமணிய அய்யர் அவர்களின் கனிஷ்ட குமாரன் சிரஞ்சீவி **எஸ். நாகநாதனுக்கும்** *(Prop. Theni Printers, Trichy).* மதுரை, டிவிஷனல் சூப்பிரண்டெண்ட் ஆபீஸில் *(S. Rly.)* பணிபுரியும் ஸ்ரீ டி. எம். ராமதுரை அவர்களின் கனிஷ்ட குமாரத்தி சௌ. **சாவித்திரிக்கும்** சமீபத்தில் மதுரையில் விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. வாழ்க மணமக்கள்



கொழும்பு ஸ்ரீ ஆர். நமசிவாயம், *(Attorney at Law)* அவர்கள் குமாரன் செல்வன் **இராசன் கனகரத்தினத்துக்கும்,** வெள்ளவத்தை, செ. செல்லையா அவர்கள் குமாரத்தி செல்வி **வாசுகிக்கும்** கொழும்பு பம்பலப்பிட்டி கதிரேசன் மண்டபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

# திருமண மண்டபத்தில் திசை தப்பிய குடும்பங்கள்



ஜனவரி 8ந் தேதி.

சென்னை எழும்பூரில் உள்ள கௌரி கல்யாண மண்டபம்.

உள்ளே எங்கு பார்த்தாலும் ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாய்ச் சிதறிக் கிடக்கும் சிறு சிறு கும்பல்கள். பெரும்பாலும் இந்த மண்ணுக்கு அந்நியமாகத் தெரிகிற முக ஜாடைகள்.

இது ஏதோ மண விழாவுக்கு வந்த கூட்டம் அல்ல. தெற்கு வியட்னாமிலிருந்து வீடு வாசலையெல்லாம் விட்டுவிட்டு அகதிகளாய் வந்து சேர்ந்திருக்கிற குடும்பங்கள்.

இவர்களில் பெரும்பாலானவர்கள் தமிழர்கள். பல தலைமுறைக்கு முன்பே அறுபட்டுப் போன தங்கள் உறவு முறைகளையும் நட்பையும் ராமநாதபுரம், தஞ்சை மாவட்டங்களிலும், காரைக்கால் பகுதியிலும் கண்டு பிடித்துப் புதுப்பித்துக் கொண்டு இங்கே காலூன்றிக் கொள்ளும் நம்பிக்கையுடன் வந்துள்ள இவர்களில் பலருக்கு வியட்நாமிய மொழியைத் தவிர வேறு எந்த மொழியும் தெரியவில்லை. காரணம், இவர்கள் வியட்நாமியத் தாய்மார்களுக்குப் பிறந்து வியட்நாமியப் பெண்களை மனைவியராக அடைந்து, வியட்நாமையே தங்கள் சொந்த பூமியாகக் கொண்டு விட்டவர்கள்.

வியட்நாமைவிட்டுக் கனவிலும் அகல முடியாத அளவுக்கு அந்த மண்ணோடு ஒன்றிப் போனவர்கள்தான் இப்போது போட்டி போட்டுக் கொண்டு இந்தியாவுக்குக் கும்பல் கும்பலாக வந்து கொண்டிருக்கிறார்கள். புத்தாண்டுப் பரிசைப் போல் ஜனவரி முதல் தேதி சுமார் நாற்பது குடும்பங்கள் வியட்நாமிலிருந்து வெளியேறிச் சென்னைக்கு வந்தன. இப்போது இரண்டாவது அணியாகச் சுமார் முப்பது குடும்பங்கள் வந்துள்ளன. இன்னும் பல குடும்பங்கள் இங்கே வந்துவிடுவதற்காக அங்கே துடிதுடித்துக் கொண்டு காத்திருக்கின்றன.

விமானக் கட்டணமும் வழிச் செலவும் ஏற்று இந்திய வம்சாவளியினரை இங்கு கொண்டு வந்து சேர்க்கும் பொறுப்பை அகில உலக செஞ்சிலுவைச் சங்கம் மேற்கொண்டு உள்ளது. இங்கு வந்து சேரும் குடும்பங்களை இந்திய செஞ்சிலுவைச் சங்கத்தின் தமிழ் நாடு பிரிவினர் பராமரித்து ஒவ்வொரு குடும்பமும் போய்ச் சேர விரும்பும் ஊர்களுக்கு டிக்கட் எடுத்துக் கொடுத்து வழிச் செலவுக்குச் சிறு தொகையும் தந்து உதவுகிறார்கள்.

திருமண மண்டபத்தில் அடைக்கலம் புகுந்திருப்பவர்களிடையே தமிழோ ஆங்கிலமோ தெரிந்தவர் எவரேனும் இருக்கிறார்களா என்று ஆவலுடன் தேடுகையில் நல்ல வேளையாகத் தமிழ் பேசத் தெரிந்த ஜெயசீலன் எதிர்ப்படுகிறார். இவருக்குப் பூர்வீகம் திருக்கோகர்ணம்.

ஜெயசீலன் வியட்நாமியத் தாய்க்குப் பிறந்தவர். வியட்நாமியப் பெண்ணை மணந்தவர். "ஏன், என் பாட்டியே வியட்நாமியப் பெண்மணிதான்" என்கிறார் ஜெயசீலன்.

வியட்நாமை விட்டு விழுந்தடித்து கொண்டு வெளியேறி வர வேண்டிய கட்டாயம் ஏற்பட்டதற்கான காரணங்களைத் துயரம் தோய்ந்த குரலில் விவரிக்கிறார் ஜெயசீலன்.

"எந்த நேரம் எங்கே குண்டு விழும் என்று தெரியாத நிச்சயமற்ற நிலை இருந்தபோது கூட அங்கிருந்து இப்படி ஓடி வர வேண்டும் என்ற எண்ணம் ஒருவருக்காவது தோன்றவில்லை" என்று விரக்தியாகச் சிரிக்கிறார்.

"இப்போது அங்கே என்ன நிலைமை?"



''யுத்தம் முடிந்து விட்டது. குண்டு விழும் ஓசை ஓய்ந்து விட்டது. ஆனால் அன்றாட வாழ்வில நிம்மதியோ, எதிர்காலம் பற்றிய நம்பிக்கையோ இல்லாமற் போய் விட்டது. எங்களை யாரும் விரட்டவில்லை. நாங்களாகவே தான் பிழைப்புக்கு வழியின்றி, குடும்பம் நடத்தப் போதுமான வருமானமும் இன்றி, 'இனி இங்கே எதிர்காலம் இல்லை' என்ற முடிவுக்கு வந்து புறப்பட்டு விட்டோம்.''

''ஏன் அப்படி ?''

''உங்களுக்கே தெரியாதா ? வடக்கு வியட்நாமுடன் தெற்கு வியட்நாம் ஐக்கியமாகி, கம்யூனிஸ்ட் ஆட்சி முறை விஸ்தரிக்கப்பட்ட பிறகு, தனிப்பட்டவர்கள் சொந்தமாகச் சிறு தொழிலோ, வியாபாரமோ நடத்த முடியாத நிலை உருவாகிவிட்டது. சாதாரண நடைபாதைக் கடைகள் வைத்துப் பிழைக்கக் கூட முடியாத நிலைமை. நகரப் பகுதிகளில் உள்ளவர்களை யெல்லாம் கிராமங்களுக்கு அனுப்பிவிட்டு, பெரிய நகரங்களில் வடக்கு வியட்நாமியரைக் குடி அமர்த்த புதிய சர்க்கார் விரும்புகிறது. 'கிராமப் பகுதிகளில் நிலம் தருகிறோம். அங்கே போய் விவசாயம் செய்யுங்கள்' என்று சர்க்கார் வற்புறுத்துகிறது. தலைமுறை தலைமுறையாக வியாபாரமும் வேறு சிறு தொழில்களும் செய்து பழகியவர்கள் திடீரென்று முன்பின் பரிச்சயமற்ற விவசாயத்தில் ஈடுபட்டால் அது எப்படி உருப்படும் ? அதிலும் ஏற்கனவே கிராமங்களில் வசிக்கிற மக்கள் பண்படுத்தப்பட்ட நிலத்தில் விவசாயம் செய்கிறார்கள். நகரங்களிலிருந்து கிராமங்களுக்குப் போகிறவர்களுக்குச் சர்க்கார் கொடுப்பது வெறும் சதுப்பு நிலம் ; இல்லாவிட்டால் பாறையும் கரடும் மண்டிய மேட்டு நிலம். அரும்பாடுபட்டு உழைத்தாலும் அந்த நிலம் சாகுபடிக்கு ஏற்றதாக மாறுமா என்பது சந்தேகம். அப்படியே மாற்றி அமைத்தாலும் அது சர்க்காருக்குத் தான் சொந்தம். உயிரைக் கொடுத்து உழைக்கிறவனுக்கு அப்படி உழைக்கத்தான் உரிமையே தவிர அந்த நிலத்தின் மீது எந்த விதமான உரிமையும் கிடையாது'' என்கிறார் ஜெயசீலன்.

''புதிய சர்க்கார் வந்ததும் உங்கள் தொழில், வியாபாரம் என்ன ஆயின?''

தெற்கு வியட்நாம் ஜனநாயக அரசு வீழ்ந்ததுமே தொழில், வியாபாரம் எல்லாம் ஸ்தம்பித்து விட்டன. முந்தைய அரசு வெளியிட்டிருந்த பெருந்தொகைக்கான நோட்டுகள் செல்லாது என்று புதிய சர்க்கார் அறிவித்ததால் பணப் புழக்கம் அடியோடு முடங்கிவிட்டது. பழைய அரசின் நாணயங்களாக ஐந்நூறு வெள்ளியை ஒப்படைத்தால் அதற்கு ஈடாகப் புதிய சர்க்கார் ஒரே ஒரு வெள்ளி தான் கொடுத்தது. பாங்கில் சேமிப்பு எவ்வளவு இருந்தாலும் நம் இஷ்டப்படி பணம் எடுக்க முடியாதபடி பாங்குக் கணக்கு வழக்குகள் முடக்கப்பட்டு விட்டன. வருஷக் கணக்கில் பாடுபட்டு நாம் சேர்த்து வைத்த தொகை எவ்வளவுதான் இருந்தாலும் மாதம் ஒரு முறை குடும்ப நபர் ஒருவருக்கு முப்பது வெள்ளி என்ற கணக்குப்படியே பாங்கியிலிருந்து பணம் எடுக்க முடியும். இந்தத் தொகை பத்து நாள் செலவுக்குக் கூடப் போதாது. அதிலும் இப்போது சீரான உற்பத்தியோ, விநியோக முறையோ இல்லாததால் விலைவாசியும் கண்மூடித்தனமாக ஏறிவிட்டது. கடைகண்ணிகள், சிறு தொழிற்சாலைகள், பெரிய கட்டடங்கள் எல்லாவற்றையும் நஷ்டஈடு எதுவும் தராமலேயே அரசாங்கம் எடுத்துக் கொண்டுவிட்டது. எனக்கென்று சுயமான தொழில் எதுவும் இல்லை. சைகோன்' நகரில் பல கட்டடங்கள் கட்டி வாடகைக்கு விட்டிருந்தவரிடம் குமாஸ்தாவாக வேலை பார்த்தேன். ஒவ்வொரு குடித்தனக்காரரிடமிருந்தும் வாடகை வசூலித்துக் கணக்கு எழுத வேண்டும். கட்டடங்களைச் சர்க்கார் ஏற்றுக் கொண்டுவிட்டதால் என் பிழைப்பில் மண் விழுந்துவிட்டது.''

''புதிய சர்க்கார் மாற்று வேலை வாய்ப்புத் தரவில்லையா ?''

''எவருக்கும் இன்ன வேலைதான் என்ற நிர்ணயம் கிடையாது. திடீரென்று எல்லோரையும் தெருக் கூட்டச் சொல்கிறார்கள். சாலை போடச் சொல்கிறார்கள். பாலம் கட்டும் பணியில் கல்லும் மண்ணும் சுமக்கச் சொல்கிறார்கள். இந்த வேலைகளில் பயிற்சி இல்லாதவர்கள் பாடு பெருந் திண்டாட்டம் தான். கிடைக்கிற கூலியோ மிகக் குறைவு. எப்படியோ நடந்ததை யெல்லாம் கெட்ட கனவாக மறந்து இங்கே வந்துவிட்டோம். அங்கிருந்து பழந் துணிமணிகளும், சாதாரண பாத்திரம் பண்டங்களும் மட்டுமே எடுத்து வர அனுமதி கிடைத்தது. ஒரு நபர் இரண்டு பவுனுக்கு மேல் தங்க நகை கொண்டு வர அனுமதி தர மறுத்துவிட்டார்கள். அமெரிக்க டாலராக இருந்தால் அதிகபட்சம் 640 டாலர் (ரூ. 4800) எடுத்துப் போகலாம் என்கிறார்கள். ஆனால் அத்தனை அமெரிக்க டாலருக்கு எங்கே போவது? வியட்நாமிய நாணயம் எதையும் மாற்றிக் கொள்ள அனுமதி கிடைக்கவில்லை. ஜனநாயக அரசு நடந்த போது புழங்கிய அமெரிக்க டாலரில் ஏதோ கொஞ்சம் மிச்சம் மீதி இருந்ததால் பிழைத்தோம். இல்லாவிட்டால் கையில் மருந்துக்குக் கூடப் பணம் இல்லாமல் அசல் பிச்சைக்காரர்களாகவே வந்து சேர்ந்திருப்போம்.

நல்ல வேளையாய் இந்திய வமிசா வளியினராக இருந்ததால் எங்களால் இப்படி வரவாவது முடிந்தது. முழுக்க முழுக்க வியட்நாமியர்களாகவே இருக்கின்ற காரணத்தால் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு அங்கேயே கிடப்பதைத் தவிர வேறு வழியில்லாத எங்கள் சகோதரர்களை நினைக்கும்போது மனம் படாதபாடுபடுகிறது'' என்று கூறும் போதே ஜெயசீலனின் கண்கள் கலங்கத் தொடங்கி விடுகின்றன.

பேட்டி: மலர்மன்னன்

---



ஒரு மனிதன் இறந்துவிட்டான் என்றால் உடனடியாக அவனுடைய எல்லா அவயவங்களின் வளர்ச்சியும் நின்று விடுவதில்லை.

முதன் முதலில் செயலற்று விடுவது மனிதனுடைய மூளை. நகம், மயிர் முதலியவை இறந்து ஒரு வார காலம் வரையில்கூட வளர்ந்து கொண்டிருக்கும்.

— டாக்டர் பார்னர்ட்

ஆதாரம் : 'டைம்ஸ் ஆப் இந்தியா' - தகவல் : வி. ந. ஸ்ரீதரன்.

## அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில், திருச்செந்தூர்-628215



# கோடி அர்ச்சனை

அறுபடை வீடுகளிலும் தனிச் சிறப்புற்று விளங்கும் திருச்செந்திலம்பதியில் வீற்றிருக்கும் அருள்மிகு சண்முகப்பெருமானுக்கு உலக நலனை முன்னிட்டு கோடி அர்ச்சனை 4-12-75 தேதிமுதல் சிறப்புற நடைபெறுகிறது. கோடி அர்ச்சனையில் ஒரு சகஸ்ரநாம அர்ச்சனைக்கு ரூ. 20/- (இருபது) வீதம் மணியார்டர் அல்லது டிராப்ட் மூலமாக "நிர்வாக அதிகாரி அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம், திருச்செந்தூர்-628215" என்ற முகவரிக்கு அனுப்பி பக்தர்கள் அனைவரும் கலந்து கொள்ள வேண்டப்படுகிறது. கோடி அர்ச்சனையில் பங்கு பெறுபவர்களுக்கு விபூதி, குங்குமப் பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

கோடி அர்ச்சனை பூஜையில் வைக்கப்பட்ட டாலர் வேண்டுவோர், சுமார் 2 கிராம் எடையுள்ள தங்க டாலர் ஒன்றுக்கு ரூ. 115/- வீதமும், சுமார் 4 கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் ஒன்றின் விலை ரூ. 7/- வீதமும் ஒவ்வொன்றுக்கும் தனித் தனியே தபால் செலவு முறையே ரூ. 3/- ரூ. 2/- வீதம் அனுப்ப வேண்டப்படுகிறது. பக்தர்கள் அனைவரும் கலந்து அருள்மிகு சண்முகப் பெருமான் திருவருள் பெற்று உய்யுமாறு வேண்டப்படுகிறது.

எஸ். பி. முனுசாமி
செயல் அலுவலர்/உதவி ஆணையர்

திரு டி. ஆர். சுப்பிரமணியம், திரு வி.வி.டி. தனபால்
திரு ஆ. நல்லகண்ணு. திரு இ. பழனிச்சாமி
அறங்காவலர்கள்

குறிப்பு:—எவ்வித கட்டணமும் இன்றி பக்தர்கள் அனுப்பும் தொகையைப் பெற்று அனுப்ப 'ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா' முன் வந்திருப்பதால், இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி அருகிலுள்ள 'ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா' கிளையின் மூலம் பணத்தை அனுப்பலாமென அறிவிக்கப்படுகிறது.

---

# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

REGD. 13-H, கச்சேரி ரோடு, மாயவரம்

## 1947 முதல் உயர்தொகை ஏலச் சீட்டுகள் நடத்துபவர்கள்

K. கேசர் சிங்
டைரக்டர்
மாயவரம்

C. M. அஷ்ராப்
டைரக்டர்
பாண்டிச்சேரி

R. கல்யாணசுந்தரம்
மானேஜிங் டைரக்டர்

| கிளை அலுவலகங்கள் : | | | போன் : நெ. |
|---|---|---|---|
| 13, H. கச்சேரி ரோடு | ... | மாயவரம் | 360 |
| 16. T. S. R. பெரிய தெரு | ... | கும்பகோணம் | 544 |
| 1647. தெற்கு வீதி | ... | தஞ்சாவூர் | 510 |
| 92. அம்பலத்தாடியார் மடத்துத் தெரு. | | பாண்டிச்சேரி | 547 |
| 171. கடைத் தெரு | ... | சிதம்பரம் | 427 |
| 67. தேரடித் தெரு | ... | திருப்பாப்புலியூர் | 326 |
| 117. பாரதியார் தெரு | ... | காரைக்கால் | 353 |
| 106. அரண்மனைக்காரத் தெரு | ... | சென்னை-1 | 25176 |
| 48-D. மேட்டுத் தெரு | ... | காஞ்சிபுரம் | — |

4

கதை:
கௌசிகன்
சித்திரம்: ம.செல்வம்





















லில்லியின் தந்தைக்கு அந்தப் பிரதேசத்தில் நல்ல செல்வாக்கு. நாட்டைக் காட்டிக் கொடுக்கும் துரோகிகளுக்கு அந்நிய நாட்டில் செல்வாக்கு இருக்காதா? போலீஸ் ஸ்டேஷனில்—

சார்! பார்த்தீர்களா? லிலி...!

போலியான தலையலங்காரம். பாகிஸ்தானி போல வேஷமிட்டு வந்துள்ள இந்தியப் பிரஜை. ம்... இது தலைமையகம் கையாள வேண்டிய கேஸ். இவளை இப்போதைக்கு லாக்கப்பில் தள்ளிப் பூட்டு.




போலீஸ் ஸ்டேஷனில்—

என் தகப்பனாரின் நண்பர் ஒருவர் என்னைக் கராச்சியில் கொண்டுவிட வரப் போகிறார். போலீஸ் பாதுகாப்புடன் அந்தக் கைதியை எங்களுடன் அனுப்ப விரும்பினால் அழைத்துப் போகிறேன். ஒரு உளவாளியைப் பிடித்ததற்கான பாராட்டுக்கள் உங்களுக்கு வரும்படியும் பார்த்துக் கொள்ளுகிறேன்.

உங்கள் யோசனையை ஏற்கிறேன். மிக்க நன்றி.

பயணிகள் விடுதியில் லில்லியும் லக்ஷ்மனும்

நம்முடன் ஒரு போலீஸ்காரர் வருவதானால் நாம் எப்படி அவளைக் கடத்திப் போவது?



ரொம்ப சிம்பிள்! உங்கள் ஆட்கள் நம்மை வழிமறிப்பார்கள். உங்களையும், என்னையும் போலீஸையும் கட்டிப் போட்டு விட்டு அவளைக் கடத்திப் போவார்கள். அவள் ஆட்கள் அவளை மீட்டுக் கொண்டு போய் விட்டதாகப் போலீஸ் நினைக்கும்!

நண்பகல், நல்ல வெயில். புழுக்கம் தாங்காத சிறைக்காவலாளி கண்ணயர்கிறான். அப்போது...

மாதவன்... நீயா...? எப்படி...?

உஷ்... சப்தம் செய்யாதே. காவல்காரர் கண்ணயர்ந்திருக்கிறார்.

லாக்கப்பிலிருந்து அவர்கள் வெளியேறும் போது...

இன்ஸ்பெக்டர் சார், கார் ரெடி. அந்த உளவாளிப் பெண்ணும் உங்கள் ஜவானும் தயாரா?

எல்லாம் ரெடி. இதோ. சாவி எடுத்து வருகிறேன். லாக்கப்பிலிருப்பவளை அழைத்து வர...

தொடரும்—

## ஸ்ரீ கல்யாண வேல் முருகன் ஆலயம்

### கல்யாண்

புனித பாரதத்திலுள்ள பம்பாய் மாநகருக்கு அருகில் உள்ள கல்யாண் நகரில் தமிழன்பர்கள் பலர் சேர்ந்து ஸ்ரீ வேல் முருகனுக்கு ஆலயம் ஒன்றை எழுப்பியுள்ளார்கள். ஆலயத்தில் வள்ளி தெய்வானை சமேத ஸ்ரீ சுப்பிரமணிய விக்ரஹப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இவ்வாலயத்தின் மஹா கும்பாபிஷேகம் ராட்சஸ வருடம் பங்குனி உத்திரத் திருநாளில் நடத்த இறைவனருளால் முயற்சி செய்து வருகிறார்கள். சுமார் 20 ஆயிரம் ரூபாய் வரையில் செலவாகுமென மதிப்பிடப்பட்டுள்ளது. அன்பர்கள் தங்களால் இயன்ற அளவுப் பொருளுதவி செய்து இத் திருத்தொண்டு சிறப்புற நிறைவேற ஒத்துழைத்து இறைவனருளைப் பெற வேண்டுகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:

**Mr. E. V. RAMAN**
**E/23, Ordinance Estate**
**Ambernath**
**Maharashtra (Pin : 621502)**

# ஒரு நாள்...
# சிவாஜி கணேசன்

ஜனவரி மாதம் இரண்டாம் தேதி. அன்றையக் காலைக் கதிரவன் எனக்கு டில்லிமா நகரில் உதித்தான். அவனுடைய கிரணங்கள் என்னை அசோகா ஹோட்டல் ஜன்னல்கள் வழியாக எட்டின.

முதல் தேதியன்று காலை மருதமலை முருகன் தரிசனம். அன்று மாலையிலேயே சென்னையில் பிளேன் பிடித்து இரவில் டில்லிக்கு வந்தாயிற்று. மறுநாள் முக்கியமான 'எங்கேஜ்மெண்ட்' இருக்கிறதே!

காலையில் சீக்கிரமே விழித்துக் கொண்டு விட்டேன். காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டு ஸ்நானம் செய்துவிட்டுத் தயாராக இருக்கும்போது திருமதி மரகதம் சந்திரசேகர் என் அறைக்கு வந்து சேர்ந்தார்கள். இருவரும் சேர்ந்தே சிற்றுண்டி சாப்பிட்டோம். வழக்கம்போல் இட்டிலி சாம்பார் தான்! அசோகா ஹோட்டல் என்பதற்காகப் பழக்கத்தை மாற்றிக் கொள்ள முடியுமா என்ன?

ஏற்கனவே இரண்டு முறை ஏற்பாடு செய்து தட்டிப்போன 'எங்கேஜ்மெண்ட்'. அதை இந்த முறையும் நழுவ விட நான் தயாரில்லை. ஆம்! இன்று காலை ஒன்பதே முக்கால் மணி அளவில் பாரதப் பிரதமர் இந்திரா காந்தி அவர்களைச் சந்திக்க ஏற்பாடாகி யிருக்கிறது. அதற்காகத்தான் காலில் எலும்பு முறிவுக்காகப் போடப்பட்டிருக்கும் பெரிய 'பாண்டேஜை'யும் பொருட்படுத்தாமல் கிளம்பி விட்டேன்.

கேரளப் பகுதியில் 'ஷூட்டிங்'போது ஏற்பட்ட உபத்திரவம் அது. நான் அது சாதாரணமாகப் போய்விடும் என்றுதான் நினைத்தேன். ஆனால் பெங்களூரில் டாக்டர் அதைப் பரிசோதித்து விட்டு எலும்பு முறிவு என்று சொல்லி விட்டார். பிரயாணத்தை மேற்கொள்ள வேண்டாம் என்றும் வற்புறுத்தினார். ஆனால் இந்த ஒரு சந்தர்ப்பத்தில் டாக்டர் பேச்சையும் தட்ட நான் தயாரானேன். எனக்குப் பாரதப் பிரதமரைச் சந்திப்பதுதான் பெரிய காரியமாகத் தோன்றியதே தவிர, கால் வலி பெரிதாகத் தோன்றவில்லை.

காலை ஒன்பதேகால் மணி அளவுக்கு அசோகா ஹோட்டலிலிருந்து மரகதம் சந்திரசேகர் அவர்களுடன் பிரதமர் அவர்களைச் சந்திக்கக் கிளம்பினேன்.

காலை ஒன்பதே முக்கால் மணி அளவிலிருந்து சுமார் பத்தரை மணி வரை என்னால் மறக்க முடியாத அந்தச் சந்திப்பும் மனம் விட்ட அளவளாவலும் நீடித்தது. என் தலைவர் காமராஜ் நினைத்திருந்ததை யெல்லாம் என்னால் மனம் விட்டு இந்திரா காந்தி அம்மையாரிடம் எடுத்துச் சொல்ல முடிந்தது. பிரதமர் கூட என் கால் கட்டைப் பார்த்து வருத்தப்பட்டார். இந்த வேதனையுடன் ஏன் வந்தீர்கள் என்றும் கேட்டார். 'இங்கே இதயம் பேசப் போகிறது! காலை நான் மறந்து விட்டேன்' என்று பதில் சொன்னேன்.

பிரதமரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தேன். அந்த நினைவிலிருந்து விடுதலை பெறு முன்பே கூட வந்திருக்கும் நண்பர் குருமூர்த்தி, வெல்லிங்டன் நர்ஸிங் ஹோமுக்குப் போக வேண்டுமென்று நினைவுபடுத்தினார். ஆம்! நிதி அமைச்சர் திரு சுப்பிரமணியம் உடல் நலக் குறைவால் அங்கே சில நாட்கள் தங்கியிருந்தாரே!

வெல்லிங்டன் நர்ஸிங்ஹோமுக்குப் போய்ச் சேர்ந்தோம். அங்கே சி. எஸ்.ஸின் குடும்பத்தினரும் இருந்தார்கள். எல்லோரையும் ஒருங்கே பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. சி. எஸ். அவர்களுடன் சில நிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்தேன். சென்னையிலிருந்து நண்பர் ஷண்முகசுந்தரம் அவர்களும் சி. எஸ்.ஸைப் பார்க்க வந்திருந்தார்.

வெல்லிங்டன் நர்ஸிங் ஹோமிலிருந்து அசோகா ஹோட்டலுக்குத் திரும்பி விட்டோம். சாப்பாட்டைத் தொடர்ந்து சற்று நேரம் ஓய்வு அவசியமாகப் பட்டது.

பிற்பகலில் காங்கிரஸ் தலைவர் பரூவாவைச் சந்திக்க ஏற்பாடாகி யிருந்தது. எனக்கு பரூவாவைப் பற்றித் தெரியும். பரூவாவுக்கு என்னைப் பற்றித் தெரியும். ஆனால் எங்களுடைய நேரிடையான சந்திப்பு இதுதான் முதல் தடவை. அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, மனிதர் நாட்டு நலனில் எத்தனை அக்கறை கொண்டிருக்கிறார் என்று தெரிய வந்தது. சுவாரசியமான மனிதர்.

பரூவா அவர்களிடம் விடைபெற்றுக் கிளம்பினேன். மாலை டீ சாப்பிட அமைச்சர் ஓம் மேத்தா அவர்கள் இருப்பிடத்துக்குப்






சமீபத்தில் டெல்லியிலிருந்து வந்த நர்த்தகி, குமாரி உமாசர்மாவின் கதக் நடனம் இரண்டு நாட்கள் இங்கு நடைபெற்றன. முதல்நாள் கிருஷ்ண கான சபை ஆதரவிலும், இரண்டாம் நாள் நவரஸாவின் ஆதரவிலும். உமா சர்மா 'கதக்' நடனத்தில் அபிநயமும் ஒரு முக்கிய அம்சம் என்பதை நிரூபித்தார். அவர் எடுத்துக் கொண்ட 'டும்ரி'யில் நிருத்தியமும், அபிநயமும் கலந்திருந்தன. நிருத்தியத்தில் தபலாவுக்கும், பத அடிகளுக்கும் போட்டி — அதாவது தபலாவில் வாசிக்கும் லய விந்நியாசங்களைப் பத அடிகள் பிரதிபலிப்பதும், கால் அடிகளில் ஒலிக்கும் லயங்களைத் தபலாவில் எதிரொலிப்பதும் ஒரு விசேஷம். இவை முன்கூட்டியே நிர்ணயிக்கப்படாமல், மனோபாவத்தில், கற்பனைசக்தியால் அவ்வப்போது தோன்றி உண்டாகும் லய விந்நியாசங்களை, தபலாவிலும், கால் அடிகளிலும் வெளிப்படுத்துவது ஒரு தனி சாமர்த்தியம். இந்த 'ஸவால் - ஜவாப்' போட்டி பிரமாதம்.

'கதக்' நடனத்துக்கே முத்தாய்ப்பாக விளங்கும் சுழல் நடனத்தில் உமா சர்மாவின் முழுத்திறனும் வெளிப்படுகிறது. பம்பரம் போல் சுழல்வதையும், கண்ணனும் கோபியும் கை கோத்துத் தட்டாமாலை சுற்றுவதையும் உமாசர்மா ஆடிக் காட்டும்போது நம் தலை கிறுகிறுத்துச் சுழல்கிறது.

'கதக்' நடனக் கலையில் பீஷ்மாச்சாரியராக விளங்கிய சம்பு மகராஜ் அவர்களிடம் பயிற்சி பெற்றவர் உமா சர்மா.

— ஆர். பி.

போனேன். டீ சாப்பிட்டுக் கொண்டே அவர் தமிழகத்தின் நிலை பற்றி மிகத் தெளிவாகப் பேசினார். மனிதர் எப்படித்தான் இவ்வளவு விஷயங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார் என்று நான் பிரமித்துப் போனேன்.

மாலைப் பொழுது இப்படிக் கழிந்தது. இரவு ஏழேகால் மணிக்கு உள்துறை அமைச்சர் பிரும்மானந்த ரெட்டி அவர்கள் தம் இல்லத்தில் இருப்பதாக அறிந்தேன். உடனே அவரைச் சந்திக்கக் கிளம்பினேன். ரெட்டிகாரு பழைய நண்பர்.

அவருக்கு என்னைப் பார்த்ததில் பரம சந்தோஷம். போதாக் குறைக்கு நான் தெலுங்கிலேயே சரமாரியாக அவரிடம் வெளுத்துக் கட்டினேன். மொழி ஏற்படுத்தக் கூடிய அன்யோன்ய பாவத்தை அன்றைக்குத்தான் நான் நன்றாக உணர்ந்தேன்.

சுமார் முக்கால் மணி நேரம் பேசிக்கொண்டிருந்தோம். அவரே என் கையைப் பிடித்துக் கார்வரை வந்து ஏற்றி விட்டார். காலைக் கவனித்துக் கொள்ளும்படி வற்புறுத்தினார்.

அசோகா ஹோட்டலுக்குத் திரும்பி வந்தேன். தில்லியில் உள்ள பல தமிழ் நாட்டு அன்பர்கள் டெலிபோன் செய்தார்கள்.

அப்புறம் டில்லியில் உள்ள அம்பியைப் பார்த்து வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தேன். தலைவர் காமராஜின் நிழல் போல, அவர் டில்லியில் இருக்கும்போது தாயாய், சேவகனாய், நண்பனாய், பராமரித்துக் கவனித்துக்கொண்ட அம்பி பெருந்தலைவர் மறைவால் எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டிருக்கிறான் என்று என்னால் ஊகித்துக் கொள்ள முடியும். ''அம்பி! இனிமேல் டில்லியில் உனக்கென்ன வேலை? சென்னைக்கு வந்து என் கூடவே இருந்துவிடு!'' என்று சொல்லிவிட்டேன். எந்தச் சூழ்நிலையிலும் என் தலைவரின் நினைவை எனக்கு ஏற்படுத்திக் கொண்டே இருக்க அம்பி உறுதுணையாக இருப்பானல்லவா?

தொழில் ஞாபகமும் கவலையும் அந்த நேரத்தில் தோன்ற இடமில்லை. இன்னும் இருபது நாட்களுக்கு ஷூட்டிங்கில் பங்கெடுத்துக்கொள்ளக் கால் இடம் கொடுக்காது என்று தெரியும்.

வீட்டின் நினைவும் வரவில்லை. நாட்டின் பிரதமரையே சந்தித்து மனம் விட்டு அளவளாவினேன் என்ற ஆனந்தத்தில் மனம் லயித்துக் கொண்டிருந்தது.

மறுநாள் காலை சென்னைக்குக் கிளம்ப வேண்டும். கூட வந்தவர்களிடம் அந்த ஏற்பாடுகளைக் கவனிக்கச் சொல்லிவிட்டு, படுக்கைக்குச் சென்றபோது இரவு மணி பத்தரை! நன்றாகவே தூங்கினேன்!

கேட்டு எழுதியவர்: **கோமதி சுவாமிநாதன்**

# பங்காளி

**ஏ.எஸ்.ராகவன்**

தம்பி வந்திருக்கிறான் வடக்கே டெல்லியிலிருந்து. ஒரு மாத விடுமுறை எடுத்திருப்பதாகச் சொன்னானே தவிர, முழுதாக நான்கு நாட்கள் ஊரில் தங்கவில்லை. அத்தை வீட்டுக்குப் போய் வருவதாகச் சொல்லி மதுரைக்குக் கிளம்பியவன், அப்படியே மாமா வீடு, சித்தப்பா வீடு என்று ஒரு 'ரவுண்டு' அடித்து விட்டுத் திரும்பினான். பால்ய நண்பன் கிச்சாமியைப் பார்ப்பதற்காகப் பட்டணம் போனான். மறுபடியும் இந்தப் பக்கம் வருவதற்கில்லை என்கிற நிலையில் எல்லாக் கணக்கையும் முடிக்கிற மாதிரி இருந்தது அவன் போக்கு.

ஆமாம். கணக்கை முடிக்கிற மாதிரிதான்.

நேற்று வஞ்சனத்திடம் மெல்லப் பேச்செடுத்தானும், பாகப் பிரிவினையைச் செய்து விடுமாறு!

அதைக் கேட்டது முதல் அகோரம் தவித்துப் போனார்.

''ஏண்டா, நான் கேள்விப்பட்டறது நிஜம் தானு? பாகப் பிரிவினை செய்யணும்னு சொன்னியாமே!'' என்று கேட்டார் தம்பியிடம்.

''ஆமாம், அண்ணு!'' என்ருன் அவன்.

''இப்போ அதுக்கு என்ன அவசியம் வந்து விட்டது?'' என்றார் அவர்.

''அவசியம் மட்டுமில்லே. அவசரமும் வந்திருக்கிறது'' என்ருன் சிவராமன்.

''ஓஹோ!''

''எங்கள் கம்பெனியிலே என்னை அமெரிக்காவுக்கு அனுப்புவதாக இருக்கிருர்கள். அமெரிக்கா போனேனுனல் திரும்ப இரண்டு மூன்று வருஷங்கள் ஆகும்.''

''ஆகட்டுமே!... வந்த பிறகு செய்து கொண்டால் போகிறது?''

''நீங்கள் இப்படியே நாளைக் கடத்தப் பார்க்கிறீர்கள்!''

''போடா அசடு!... நான் சொல்றதைப் புரிஞ்சுக்காமல் நீ ஏதேதோ பேசறே... சம்சாரியாப் போயிட்டதினுலே என்னைப் பத்தி நீ என்னென்னவோ கணக்குப் போடறே... டேய், மாடு எளைச்சாலும் கொம்பு எளைக்கல்லேடா, தெரிஞ்சுக்கோ... இந்தமாதிரி எல்லாம் இனிமேல் பேசாதே. ஆமாம்.''

அகோரம் தீர்மானமாகப் பாகப் பிரிவினையையும், பத்திரப் பதிவையும் மறுத்த பிறகு, சிவராமன் என்ன செய்வான்? அவரிடம் இவ்வளவு தூரம் எதிர்த்து நின்று பேசியதே பெரிசு. அவர் கூடப் பிறந்த அண்ணன்தான். ஆனல் சின்ன வயசு முதல் தந்தையும் தாயுமாய் இருந்து அவனை வளர்த்தவர்.

நிலைப்படியருகில் நின்ற வஞ்சனம் பெருமூச்சு விட்டாள். கூடத்தில் கோலப் புள்ளிகளைக் கணக்கிட்டுக்கொண்டிருந்த மூத்த பெண் சாருவும், தையல் மிஷினில் நூலைக் கோத்துக்கொண்டிருந்த இரண்டாவது பெண் சசிரேகாவும் சித்தப்பாவையும் அப்பாவையும் மாறி மாறிப் பார்த்தார்கள். இவர்கள் யாரையும் பாராமல், தன் போக்கில் சித்தப்பா வாங்கி வந்திருந்த முயல் பொம்மைக்குச் சாவி கொடுத்து ஓட்டப் பந்தயம் விட்டுக் கொண்டிருந்தாள் கடைக்குட்டி மீனு!

மூன்றும் பெண்கள் அகோரத்துக்கு. பெரிய பெண்ணுக்கு வரன் பார்த்துக் கொண்டிருக்கிருர். பூர்வீகச் சொத்து அதிகமில்லே. தம்பிதான் அவருக்கு இருக்கிற மிகப் பெரிய சொத்து. அவனை வளர்த்து ஆளாக்கி விட்டதே அவர் புரிந்த சாதனை.

சிவராமன் வேகமாக வெளியே போனுன். போனவன் சற்றைக்கெல்லாம் வேதாந்தம் அய்யங்காரை அழைத்துக் கொண்டு வந்து நின்ருன்.



''வாங்கோ...'' என்றார் அகோரம், அவரைப் பார்த்ததும். தம்பியை முறைத்துப் பார்த்தவாறே. ''இவரை ஏன்டா அழைத்து வந்தாய் இப்போது? எப்படியாவது என்னை மசிய வைக்கணும்னு பார்க்கிறே? அது நடக்காது'' என்றார்.

வேதாந்தம் அய்யங்கார் அயரவில்லை. சிரித்தவாறே உட்கார்ந்து விட்டார். ''இப்போ என்ன வந்துட்டுது?... இப்ப எதுக்காக இந்தக் கலாட்டா?'' என்றவாறே.

''அண்ணா தன் கட்சியையே பேசுகிறார், மாமா'' என்றான் சிவராமன்.

வேதாந்தம் பலமாகத் தலையை அசைத்து. ''டேய், அகோரம் என்னிக்கும் நியாயத்துக்குப் புறம்பாய்ப் பேச மாட்டான்டா, தெரிஞ்சுக்கோ... அவன் மானிடா... பழைய காலத்து மெட்ரிகுலேஷன் படிச்சுட்டு, அவன் இந்த ஊரிலே விவசாயத்துலே உட்கார்ந்துட்டான் என்கிறதுக்காக அவனைக் குறைச்சு எடை போட முடியாதுடா... இங்கிலீஷிலே சூரன். என்னவோ கால விபரீதம், இப்படி இருக்கான்!'' என்றார்.

''நான் அண்ணாவை இளப்பமா செய்யறேன்?'' என்று வாதிட்டான் சிவராமன்.

''நீ அப்படிப்பட்ட பையனில்லை. அதுவும் தெரியும்'' என்றார் வேதாந்தம். அவர் இம்மாதிரி விவகாரங்களில் இரண்டு கட்சிகளையும் இணைத்துக் கொண்டு போவதில் சமர்த்தர். 'இப்போ உனக்கு வேண்டியது என்னடா, சிவராமா?... பாகப் பிரிவினைதானே?.. அகோரம், இதோ பார், தோளுக்கு மீறின பெத்த பிள்ளையும் தோழன்னு சொல்லியிருக்கா... எப்போ அவன் கேட்டுட்டானோ, இனிமே அவன் வேண்டாம்னாலும் நீ பிரிச்சுப் போட்டுடு...'' என்றார்.

''மாட்டேன்னு நான் சொல்லலே மாமா! ஆனா....'' என்றார் அகோரம்.

''ஆனா என்னடா ஆனா?''

''அவன் அதோடு நிற்கல்லியே!''

''வேறே என்ன கேட்கிறான்?... பழைய பாக்கி, நகை நட்டுன்னு வம்பு பண்றானா?''

''அப்படிப் பண்ணினாலும் தேவலையே!''

''புதிர் போடாமல் சொல்லேன் விஷயத்தை... அவனைப் படிக்க வைச்சு ஆளாக்கியிருக்கிறாய்... அதுக்காக நீ ஏதாவது 'காம்பென்ஸேஷன்' கேட்கிறாயா என்ன?''

''மாமா, அகோரத்தை நீங்க யார்னு நினைச்சு இப்படி ஒரு கேள்வி கேட்டுவிட்டீர்கள்?''

சிவராமன் இடையிட்டு, ''மாமா! நானே சொல்லிடறேன். அண்ணா இங்கே ஊரிலே கையகல நிலத்தை வெச்சுண்டு பாடுபடறார்...மூத்தவளுக்கோ கல்யாணம் செய்தாகணும்... அடுத்தடுத்துப் பெண் குழந்தைகள்... அதனாலே நான் என்ன சொல்றேன்னா....'' என்று தொடர்வதற்குள், அகோரம் குறுக்கிட்டு விட்டார். ''மாமா! அவன் பேச்சைக் கேட்காதேங்கோ... எல்லாத்தையும் என் தலையிலே கட்டப் பார்க்கிறான்'' என்று கத்தினார்.

வேதாந்தம் அய்யங்காருக்கு விளங்கவில்லை. ஒரு பாட்டம் வெற்றிலை புகையிலை போடலாமென்று முடிவு செய்தவராய் வெற்றிலைச் செல்லத்தைத் திறந்தார். 'உம்...உம்...' என்றவாறே.

அகோரம் விடவில்லை. ''இவனை வளர்த்ததற்காக நன்றி சொல்ற அழகு இதுதானா. கணக்குத் தீர்த்து போற மாதிரி ஆகிறது... இப்போ புதுசா ஓர் அணுகுண்டைப் போடறான். அமெரிக்கா போகப் போகிறானாம். அதனாலே எல்லாத்தையும் முடி என்கிறான்'' என்றார்.

''இதெல்லாம் நீங்களாக யூகித்துக்கொள்கிற தப்புக் கணக்கு அண்ணா!'' என்றான் சிவராமன்.

அவனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

வேதாந்தம் வாசனைப் புகையிலையைத் தரித்த பிறகு, இருவரையும் பார்த்தவராய், ''உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும். விஷயத்தை இன்னதுன்னு புட்டு வையுங்கோ. எனக்கு மூளை குழம்பறது.'' என்றார்.

சிவராமன் ஆரம்பித்தான். ''மாமா! சகவரன் கிருபையாலே நான் சௌக்கியமா இருக்கேன். என்னை இப்படி உயர்த்திவிட்டது யாரு, அண்ணாதானே?...அவருக்கு நான் பட்ட கடனை எப்படித் தீர்க்கிறது?''

''பார்த்தீங்களா, அய்யங்கார்...''

''உஷ், நீ சும்மா இரேன்...அவன் சொல்லி முடிக்கட்டும்.''

''தவிரவும், மாமா, இப்போ நான் அமெரிக்கா போகப் போகிறேன். சாருவுக்கு ஒரு கல்யாணம் நிச்சயமாகிறதுன்னு வெச்சுக்குங்கோ. அப்போ நிலம் நீச்சு பேரிலே பணம் வாங்க வேண்டி வரலாம். அப்படி வந்துட்டா, என் கையெழுத்தும் தேவைப்படும் இல்லையா?''

''கட்டாயம் தேவைப்படும்.''

''நான் என்ன சொல்றேன்னா, இப்பவே பாகம் பிரியுங்கோ... என் பங்குக்கு உள்ளதை அப்படியே அண்ணா பேருக்கு எழுதிக் கொடுத்திடறேன்... எனக்கும் பங்கு இருந்தால்தானே, இந்தக் கையெழுத்து, காலெழுத்து விவகாரமெல்லாம்? அண்ணா என்னடான்னா, இதுக்கு ஒத்துக்க மாட்டாராம். மாடு இளைச்சாலும் கொம்பு இளைக்கல்லேங்கறார்!... என் பங்கை வாங்கிக்க மாட்டாராம்...வாங்கிக் கொண்டால் என்ன?...''

வேதாந்தம் விக்கித்துப் போனார். ''டேய், இது பாகப் பிரிவினை இல்லேடா... பாசத்தை ரெண்டு பேருமா ஒட்டு மொத்தமா ஒருத்தருக்கொருத்தர் கொள்முதல் செய்கிறீர்கள். என் ஆயுசிலே இப்படி ஒரு வழக்கு வந்ததில்லே. ராம, லட்சுமணன் மாதிரி தீர்க்காயுசா, என்னிக்கும் இதே மாதிரி சண்டை போட்டுண்டு இருங்கோடா'' என்றார் பரவசமடைந்தவராய்.

'' கடைசியில் அவன்தான் ஜெயிச்சுட்டான்! ... போனால் போறது... யார் அவன்? என் தம்பிதானே?'' என்றார் அகோரம், தொண்டை கம்ம.

---



வீட்டுக்குள் அணியும் பெண்களுக்கான செருப்பில் சிறிய டிரான்ஸிஸ்டர் ரேடியோவைப் பொருத்தியிருக்கிறது அமெரிக்க நிறுவனம் ஒன்று. இதனால் வீட்டில் வேலை செய்யும்போதே இசையையும் கேட்டுக்கொண்டிருக்கலாம்; வேலையின் சிரமம் குறையும் என்கிறது அந்த நிறுவனம்.

நியூஸ் வீக் — ஆர். எம்.

# தசாவதாரம்

சிவாஜி கணேசன், எம். ஜி. ஆர். நீங்கலாக அனேகமாக, தமிழ் நடிகர்கள் அனைவருமே நடித்துள்ள வண்ணப்படம் தசாவதாரம். பிரில்லியண்ட் பிக்சர்ஸ் கார்ப்பொரேஷனின் பிரம்மாண்ட தயாரிப்பு. மச்சாவதாரத்தில் தொடங்கி, கல்கி அவதாரத்தில் முடிகிறது. திருப்பாற்கடலில் திருமால் அறிதுயில் கொண்டிருக்கும் முதல் காட்சியே பிரமாதமாகக் களை கட்டி விட்டது. படம் முழுவதும் காட்சிக்குக் காட்சி தோன்றிப் பாட்டுக்கள் பாடி நாரதராக நடித்திருக்கும் இசைமாமணி சீர்காழி கோவிந்தராஜன் தான் இப் படத்தின் 'ஹீரோ!' அவர் மட்டும் இல்லா விட்டால் திருமாலின் அவதார ரகசியங்களையும் பெருமைகளையும் எடுத்துச் சொல்ல யாருமே இல்லாமல் தவிக்க வேண்டியதுதான்!

ஏராளமான நடிக, நடிகைகள் நடித்திருக்கும் இப்படத்துக்கு உடுமலை நாராயண கவி, அ. மருதகாசி, வாலி ஆகியவர்கள் பாடல்கள் இயற்றியிருக்கின்றனர் — மொத்தம் பதின்மூன்று பாடல்கள்! இவற்றில் சில பாடல்கள் நீளம், மிக நீளம்!

தமிழ்த் திரையுலகின் பிரபல டைரக்டரான கே. எஸ். கோபாலகிருஷ்ணன் திரைக்கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பொறுப்புக்களை ஏற்றுத் திறமையாக நிர்வகித்திருக்கிறார். இவருக்கு எப்போதுமே வசனத்தில் ஒருமோகம் உண்டு. இவரது படங்களில் எல்லாப் பாத்திரங்களுமே ஒரு சொற்பொழிவு செய்து விடுவார்கள். இப்படத்திலும், பாத்திரங்களையெல்லாம் தாராளமாகப் பேச விட்டிருக்கிறார் ஆகவே படம் கொஞ்சம் நீளமாகவே இருப்பதில் வியப்பில்லை. இதனால் திரைப்படத்தின் இன்றியமையாத அம்சமான விறுவிறுப்பு பெரிதும் பாதிக்கப்பட்டு விட்டது. தந்திரக் காட்சிகள் பாராட்டும்படியிருக்கின்றன. ஒளிப்பதிவும் தான்.

குறிப்பிடத்தக்க சிறந்த நடிப்பினை இரண்யனாக வரும் எம். ஆர். ராதா, இரண்யன் மனைவி லீலாவதியாக வரும் சௌகார் ஜானகி, வாமன அவதாரமாக வரும் சின்னப் பையன் ஆகியோரிடம் காண்கிறோம்.

ராமாவதாரக் காட்சியில் சூர்ப்பணகை வரும் கட்டத்தில் அவள் பேச்சு அப்புனித இதிகாசத்துக்குப் பெருமை தருவதாக இல்லை. அதைச் சிறப்பாக அமைத்திருக்கலாம்.

வைகுண்ட ஏகாதசியும்; சிவராத்திரியும் உள்ள வரையில் ''தசாவதாரம்'' தங்கு தடை இல்லாமல் ஓடும்! —காந்தன்



லிங்கனின் யுத்த மந்திரியாக இருந்தவர் எட்வர்டு எம். ஸ்டாண்டன். ஒரு முறை, லிங்கன், அவரைக் கலந்தாலோசிக்காமல் சிலருக்குப் பதவி மாற்றங்கள் கொடுத்து விட்டார். தன்னைக் கலந்தாலோசிக்காமல் அதிபர் உத்தரவு பிறப்பித்தது தவறு என்று ஸ்டாண்டன் எல்லோரிடமும் சொல்ல ஆரம்பித்துக் கடைசியில் 'லிங்கன் ஒரு முட்டாள்' என்றே கூறி விட்டார். இது லிங்கன் செவிக்கும் எட்டியது. அவர் என்ன செய்தார்?

''ஸ்டாண்டன் சொல்லிலோ, செயலிலோ தவறு இழைத்ததே கிடையாது. எதற்கும் நான் அவரைக் கண்டு பேசுகிறேன்'' என்றார்.

அப்படியே, அவர், ஸ்டாண்டனைக் கண்டு பேசித் தாம் பிறப்பித்த உத்தரவு அவசரமானது மட்டுமல்ல, தவறானதும்கூட என்று தெரிந்து கொண்டு அதை ரத்து செய்து விட்டுத் தம் தவற்றைச் சுட்டிக் காட்டியமைக்காக ஸ்டாண்டனுக்கு நன்றியும் தெரிவித்தார்.

ஆதாரம்: நெல்ஸன் பாஸ்வெல் எழுதிய நூல். தகவல்: ஏ. சங்கரன்.



# இன்பத் தென்றல்

## குல்ஷன் நந்தா

**19**

"இப்படித் தலையைப் பிடித்துக் கொண்டால் ஆயிற்று? ஆண்டவனின் எண்ணத்துக்கு எதிராக யாரும் எதுவும் செய்துவிடமுடியாது. நேற்று என்ன நடந்தது என்பதை நீ மறந்து விடு. நாளை என்ன நடக்க வேண்டும் என்பதை நினைத்துப் பார். உன் அம்மாவுக்கு ஓய்வு மிக மிகத் தேவை. ஒரு வாரம் இங்கேயே தங்கும்படியாக அவளை ஜெனரல் வார்டுக்கு மாற்றிவிடுவது நலம் என்று எண்ணுகிறேன். ஏனெனில், தனிப்பட்ட முறையில் உன்னால் செலவைச் சமாளிக்க முடியாது." இப்படிக் கூறியவண்ணம் டாக்டர் பக்ஷி எதிரே வந்து நின்ற நர்ஸை நோக்கினார். அவள் வேறு ஒரு நோயாளியைக் கவனிப்பதற்காக அவரை அழைத்துப் போக வந்திருந்தாள்.

டாக்டர் போனபின் ரூபா இடிந்துபோய் அப்படியே நின்றவாறு அவர் சொல்லிப் போன விஷயங்களைப் பற்றி அசை போட்டாள். திடீரென்று அவளுக்கு ஓர் உள்ளுணர்வு. தான் தனியாக இல்லை என்பது போலும், பக்கத்திலேயே யாரோ நிற்பது போலும் தோன்றியது. எனவே, திரும்பிப் பார்த்தாள். சில வினாடிகளுக்கு முன் அங்கு வந்திருந்த சாரதா தேவி அவளுக்கு அருகில் வந்து நின்றுகொண்டு அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"நீங்களா?" விதிர்விதிர்த்துப் போய்க் கேட்டாள் ரூபா.

"உன் அம்மா எப்படி இருக்கிறாள்?"

"அவள் இந்தப் பூட்டுக்குப் பிழைத்துவிட்டாள் என்று டாக்டர் கூறுகிறார்!"

"நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். கவலைப் படாதே. உன் அம்மாவை ஜெனரல் வார்டுக்கு எடுத்துப் போகத் தேவையில்லை. என்ன செலவானாலும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்!"

சாரதாவுக்குத்தான் என்ன தலைப் பொறுப்பு!

"ஆனால் அக்கா! இதெல்லாம் நியாயம் இல்லை. நான் உங்கள் பேச்சைக் கேட்க முடியாது!" என்று ரூபா மறுத்தாள்.

"பைத்தியம் போலப் பேசாதே. உன் மனச் சுமைகளையெல்லாம் இறக்கிப் போடு."

"உங்கள் உயர்ந்த உள்ளத்துக்குக் கடமைப்பட்டிருக்கிறேன். இருந்தாலும் என் துரதிருஷ்டத்துக்கு நீங்கள் தண்டனை அநுபவிப்பது நியாயம் இல்லை. உங்கள் உபகாரச் சுமையை என்னால் தாள முடியாது."

"தாள முடியாது என்றால் வேண்டாம். என் உபகாரத்துக்குப் பதில் உபகாரம் செய்து விட்டுப் போ!" சாரதாதேவி தாழ்ந்த குரலில் கூறினாள்.

ரூபா ஒரு கணம் திகைத்துப் போனாள். 'சாரதாதேவி என்ன சொல்லுகிறாள்? அவளுடைய செயலுக்கு உள்ளுறை பொருளாக ஏதாவது இருக்குமோ?' என்று வியந்தவாறே ரூபா சாரதாதேவியை நோக்கினாள்.

"சொல்லு, சம்மதமா?" சாரதா தேவி உதடுகளில் முறுவல் நெளியத் தன் கேள்வியைத் தொடர்ந்தாள்.

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" ரூபா ஏதும் விளங்காமலே கேட்டாள்.

"உபகாரத்துக்குப் பதில் உபகாரம் செய்வாய் அல்லவா?"

"எப்படி?"





"என் அநுராப்பின் அன்பை எனக்குத் திருப்பித் தந்து....."

"அக்கா!" ரூபாவின் வாயிலிருந்து அவளையும் மீறிக் கீச்சொலி ஒன்று எழுந்தது. சாரதாதேவியின் சொற்கள் அவள் மூளையைப் பெரும் சுத்தில் கொண்டு தாக்குவது போலத் தாக்கின. அவமான உணர்வினால் அவள் உடல் குன்றிப் போனாள். மூச்சு முட்டவே, நிலைகொள்ளாமல் விழி பிதுங்க ஒரு கணம் திகைத்து நின்றாள். பிறகு எப்படியோ தன்னைச் சமாளித்துக் கொண்டு சாரதாதேவியைப் பார்த்தாள். பெரு வெள்ளத்தில் வெகு தூரத்துக்கு வெகு தூரம் ஆதரவாகக் கைகொடுத்து உதவி வந்த ஒருவர் கரை நெருங்கியதும் திடுதிப்பென்று தன் ஆதரவை முறித்துக் கொண்டு நட்டாற்றில் தள்ளித் தவிக்கவிட்டால் எப்படியிருக்கும்? ரூபாவுக்குச் சாரதா தேவி தன்னை அப்படி மூழ்கி மரிக்க வற்புறுத்துவதாகத் தோன்றியது. இதுதான் வெண்ணெய் திரண்டு வரும் நேரத்தில் தாழி உடையும் கதையோ? ரூபாவுக்குக் கைகால்கள் எல்லாம் நடுங்கின. உடல் வியர்த்து விறுவிறுத்து விட்டது. இன்னும்கூட அவளுக்குச் சாரதாதேவியின் சொற்களில் நம்பிக்கை ஏற்படவில்லை.

"சொல்லு, சம்மதமா?" சாரதாதேவி முறுவலைக் குறைத்து முகத்தைக் கம்பீரமாக வைத்துக் கொண்டு மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டாள்.

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள், அக்கா?" ரூபா துடிதுடித்து விட்டாள்.

"ரூபா! நான் சமூகச் சீர்திருத்தம் என்ற பெயரால் என் குடும்பத்தையும் அந்தச்

தமிழாக்கம்:

ரா. வீழிநாதன்



''புடவை சாயம் போகுமா என்பதை டெஸ்ட் பண்ணிட்டு வாங்கலாமேன்னுதான்...''

சீர்திருத்தத்துக்கு உள்ளாக்க விரும்பவில்லை. என் தம்பியின் முட்டாள்தனத்துக்கு இணங்கி என் கோட்பாடுகளையும் கொள்கைகளையும் காற்றில் பறக்க விடவும் தயாராயில்லை. பிறர் வீட்டுத் தரை விரிப்பில் ஓட்டுப் போட்டிருப்பதைக் கண்டு, அதில் கலைநுணுக்கம் மிகுந்திருப்பதாக வாய் கிழியப் பாராட்டுகிறேன் என்று வைத்துக் கொள். அதற்காக என் குடும்பத்திலும் அத்தகைய அசிங்கத்துக்கு இடம் கொடுக்க வேண்டும் என்று எங்கே சொல்லியிருக்கிறது ? என் குடும்பத்தில் மாசு மறு படிய நான் ஒரு நாளும் விடமாட்டேன். என் கொள்கைகளுக்காக நான் கணவரிடமிருந்தே விலகி வந்தவள் என்றாலும், எனது ஒரே அருமைச் சகோதரனை நான் எந்த முறையிலும் இழக்க விரும்பவில்லை.''

'' நீங்கள் கூறுவதைப் பார்த்தால் என் காதலை விலை பேச வந்திருக்கிறீர்கள் என்றல்லவா தோன்றுகிறது !''

''இல்லை, உன்னிடம் இரக்கப் பிச்சை கோரி வந்திருக்கிறேன் !''

''இதை உங்கள் உடன்பிறந்தானிடமே கேட்டிருக்கலாமே !''

'' ஆனால் அவனும் என்னைப் போல் பிடிவாதக்காரனாயிற்றே !''

''அப்படியானால் உங்கள் பிடிவாதத்தை நீங்கள் விட்டுக் கொடுங்கள். நீங்கள் உயர்ந்தவர். பொதுப் பணி புரிவதில் வல்லவர். மக்களின் துயரைத் துடைப்பதில் ஆண்டவனுக்கு அடுத்தபடியான இடத்தை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள். உலகம் உங்களிடமிருந்து எத்தனை எத்தனையோ கற்கிறது. ஏற்கிறது; பூசணியைப் பார்த்துப் பூசணி நிறம் பெறுகிறாற் போல ! நான் ஏழைப் பெண், அநாதைப் பெண். என்னைத் தியாகம் செய்யச் சொல்லி நிர்ப்பந்தப்படுத்துவதனால் உங்களுக்குப் பெரிதாக என்ன கிடைத்து விடப் போகிறது ?''

''பெயரும், புகழும். நான் என் கணவரை விட்டு ஏன் விலகி வந்தேன், தெரியுமா?''

'' ஏன் ?''

''அவர் ஒரு சாதாரண வீட்டு வேலைக்காரியிடம் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தார் என்பதற்காக. இன்றுகூட அவர் வீட்டில் அவரைக் காட்டிலும் எனக்குத்தான் மதிப்பு — மரியாதை அதிகம். நானைக்கு என் தம்பி ஒரு சாதாரண வேலைக்காரியின் மகளை — அதுவும் அப்பன் பெயர் தெரியாத பெண்ணைத் திருமணம் செய்து கொண்டால், உலகம் என் மீது காறித் துப்பும். என் கணவர் கெக்கெலி கொட்டிச் சிரிப்பார். புகுந்த வீட்டினர் என்னைக் குத்திக் காட்டிக் கேலி செய்வார்கள் !'' சொல்லும்பொழுது சாரதா தேவியின் இமையோரங்களில் நீர் கட்டியது. அவள் குரலில் வேதனையும் உணர்ச்சிப் பெருக்கும் இழையோடி ரூபாவின் மனத்தையே கரைத்தன. உள்ளம் புழுங்கிப் புழுவாகத் துடித்தது. அவளுக்குமே அழுகை பொத்துக் கொண்டு வந்தது. பேசாமல் நின்றவண்ணம் சாரதா தேவியின் உள்ளத்து நிலையை உய்த்துணர முற்பட்டாள். இருவரும் வெகு நேரம் வரையில் வாய் திறந்து பேசவில்லை.

''இன்று நான் சண்டிகருக்குத் திரும்பியாக வேண்டும் !'' சாரதாதேவி பேச்சைத் தொடர்ந்தாள்.

''குஷாலாகப் போய் வாருங்கள். உங்களை நான் எங்கே தடுத்தேன் ?'' பற்றற்ற உணர்வோடு பேசினாள் ரூபா.

''ஆனால் உன் முடிவைத் தெரிந்து கொள்ளாமல் நான் இங்கிருந்து எப்படிப் போக முடியும் ?''

'' ஆசைகளையும் அபிலாஷைகளையும் கழுத்தை நெரித்துப் போட்டபின், முடிவு என்ன செய்வதற்கு இருக்கிறது ? போங்கள், உங்கள் சமூகத்துக்கே திரும்பிப் போங்கள். உங்களது ஒரே அருமைத் தம்பியை நன்றாகச் சங்கிலியில் பிணைத்துப் போடுங்கள். என்னைப் போல் ஆதரவற்ற வேறு ஏழை எளியவர்களின் உணர்ச்சிகளையாவது அவர் நெஞ்சைத் திருகிக் கொல்லாமல் இருக்கட்டும்!''

அப்பா! ரூபாவின் பேச்சில்தான் என்ன துடிப்பு! என்ன தவிப்பு !

''ரூபா !'' சாரதா தேவியின் உதடுகள் துடித்து அடங்கின. கண்ணீர் கோத்து நின்ற இமைகள் நீரைச் சொரியலாயின. அவள் என்னவோ சொல்ல நினைத்தாள். ஆனால் அவளால் சொல்லத்தான் முடியவில்லை. கடைசியில் எதுவும் சொல்லத் தோன்றாமல் தயங்கியவாறே தர்ம சங்கடத்தோடு பர்ஸைத் திறந்து நூறு ரூபாய் நோட்டுக் கற்றை ஒன்றை எடுத்து ரூபாவிடம் நீட்டினாள்.

'' என்ன இது ?'' என்று ரூபா அலட்சியமாகக் கேட்டாள்.

'' உன் அம்மாவுக்குச் சிகிச்சை செய்வதற்காக!'' என்று கூறிய சாரதா தேவி பலவந்தமாக அந்த நோட்டுக் கற்றையை ரூபாவின் கைகளில் திணிக்க முயன்றாள்.

'' நான் செய்த உபகாரத்துக்குப் பிரதியுபகாரம் பணத்தால் செய்ய விரும்புகிறீர்களா? என்னைத் தாழ்ந்தவளாகக் காட்டி அவமானப்படுத்த இதைக் காட்டிலும் வேறு நல்ல வழி உங்களுக்குத் தெரியவில்லையா ?'' என்று ரூபா கடுப்போடு வெடித்தாள்.

''ரூபா !'' சாரதா தேவியின் குரல் தழுதழுத்தது. அவள் ஒரு கணம் தயங்கி, ''நான் வந்து... இதை....'' என்று தொடங்கி, மீண்டும் என்ன சொல்வது என்று புரியாமல் திணறினாள்.

அவள் பேச்சை முடிப்பதற்கு முன்பாகவே ரூபா அந்த நோட்டுக் கற்றையைப் பிடுங்கித்

இன்னிக்கி என் இண்டர்வியூவை
எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ?
எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக்
கேளுங்க, அனாஸின்
சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது:** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது:** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

*ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.*



சக்தி வாய்ந்த, நம்பகமான

## அனாஸின்

## இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி

தரையில் வீசினாள். ''நீங்கள் இங்கிருந்து உடனே போய் விடுங்கள்! ப்ளீஸ்! என்னை என் பார்வையிலேயே தாழ்த்த ஏன் முயல கிறீர்கள்?'' என்று இரைந்தாள். அப்புறம் தன் வெறுப்பை உமிழாத தோஷமாக முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அதுமட்டுமின்றி அவன் முகத்தில் விழிக்க மனமில்லாமல் ஓடி டாக்டர் பக்ஷியின் அறைக்குள் புகுந்து கொண்டாள்.

சாரதா தேவி அங்கேயே சிலையாக வடித்தவள் போல் நின்றாள். அவளுக்குத் தன் கன்னத்தில் யாரோ ஓங்கி அறைந்தாற் போலத் தோன்றியது. ரூபா ஓடிப் போய் ஒளிந்து கொண்ட அறையையே அவள் வெகு நேரம் வரை பார்த்துக் கொண்டிருந்தாள். உள்ளிருந்து விசிப்புக் குரல் மட்டுமே வந்து கொண்டிருந்தது.

சாரதா தேவி நோட்டுக் கற்றையை எடுப்பதற்காகக் குனிந்தாள். ஆனால் அவளை முந்திக்கொண்டு அதை வேறு யாரோ எடுத்துக் கொண்டு விட்டிருந்தார்கள். எடுத்தவர்களைப் பார்க்கத் திரும்பிய சாரதா தேவி நிலைக் குத்தலிட்டவள் போல் நின்றுவிட்டாள். அவள் எதிரில் நோட்டும் கையுமாக ஜான் நின்றுகொண் டிருந்தான். அவனுடைய பழுப்பேறிய அசிங்கமான பற்களையும் பயங்கரமான முகத்தையும் பார்த்துச் சாரதா தேவி பயந்து விட்டாள்.

''உங்களுடைய நோட்டா?'' என்று கேட்ட வண்ணம் ஜான் தன் கையிலிருந்த நோட்டுக் கற்றையை அவளிடம் நீட்டினான்.

சாரதா தேவி மிரண்ட பார்வையில் ஜானைப் பார்த்தாள். அவன் உடலில் என்ன, முகத்திலும் கூடத் தடியடிபட்ட அறிகுறிகள் இன்னும் இருந்தன. அவன் பார்வையோடு பார்வை கலந்தபோது சாரதா தேவிக்கு உயிரே போய்விடும்போலிருந்தது. இருந்தாலும் நோட்டுக் கற்றையைச் சட்டென்று அவன் கையிலிருந்து பிடுங்கிக் கொண்டு படபடவென்று வெளியே செல்லலானாள். போகும்பொழுதும் பயந்த வண்ணம் மீண்டும் ஒருமுறை அவனைப் பார்த்தாள். ஜான் அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். சாரதா தேவிக்குப் பீதி பன்மடங்கு ஆயிற்று. அங்கிருந்து ஓடினால் போதும் என்று நடையில் வேகத்தைக் கூட்டினாள். வெளி வாசலைத் தாண்டியபின்தான் அவள் படபடப்பு ஓரளவுக்கு அடங்கியது.

ரூபாவின் விசிப்பொலி அடங்கியபாடில்லை. அதைக் கேட்ட ஜான் மெதுவாக நடந்து ரோஸி அரை மயக்கத்தில் படுத்துக் கிடந்த அறை வாசலை அடைந்தான். அவனுக்கு உள்ளே நுழையத் துணிவில்லை. எனவே, ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். ரூபா விசிப்பு அடங்கி மனத்தை இலேசாக்கிக் கொண்டு வெளியே வருவதைக் கண்டபோது, அவனுக்கு அங்கே நிற்பது உசிதமாகத் தோன்றவில்லை. சட்டென்று நழுவி அடுத்த வராந்தாவில் போய் நின்று கொண்டான். அன்று ஏனோ, அவனுக்கு அவளை எதிர் கொள்ள ஓர் அச்சம்.

**சா**ரதா சண்முகரை அடைந்தபொழுது இரவு மணி பத்து அடித்து விட்டது. அநூப் வீட்டில்தான் இருந்தான். அதுவும் உறங்காமல் விழித்துக் கொண்டிருந்தான். சாரதா அஞ்சி அஞ்சி ஓசைப்படாமல் அடிமேல் அடி வைத்து ஹாலுக்குள் நுழைந்தாள். அவன் விழித்துக் கொண்டிருப்பதைக் கண்டவள் சாமான்களை எடுத்து வருவதற்காகச் சனன் சிங்குக்குக் குரல் கொடுத்தாள்.

அக்காவின் குரல் கேட்டு அநூப் பதறி அடித்துக் கொண்டு எழுந்தான். விடு விடு என்று ரேடியோ கிராமின் ஒலியைக் குறைத்தான். வெறுங் காலுடனேயே அவசரம் அவசரமாகத் தன் அறையைவிட்டு வெளியே வந்தான். அக்காவைக் கண்டதும் அவன் முகம் மலர்ந்தது. சனன் சிங் வருவதற்கு முன்பாகவே, அவன் தன் அக்காவின் சூட்கேஸைத் தூக்கிக் கொண்டான். அவள் எத்தனை தடுத்தும் அவன் கேட்கவில்லை. தானே தூக்கிச் சென்று அவளுடைய அறையில் வைத்தான். அநூப்பின் துறுதுறுப்பையும் முகத்தில் மலர்ந்திருந்த முறுவலையும் கண்ட சாரதா, தானும் சிரிக்க முயன்றாள். ஆனால் அவளால் சிரிக்கத்தான் முடியவில்லை. அநூப்புக்கு உண்மை நிலை தெரிய வரும் பொழுது அவனுடைய முகத்தில் காணும் அத்தனை மகிழ்ச்சியும் மலர்ச்சியும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும் என்பதை அவள் அறிந்திருந்ததே இதற்குக் காரணம்.

சாரதா பயணக் களைப்பைப் போக்கிக் கொள்ள சோபாவில் படுத்துக் கொண்டாள். அநூப் ஒரே மூச்சில் நான்கு நாள் செய்திகளையும் கடகடவென்று ஒப்புவித்து முடித்தான். அவன் சொன்ன விஷயங்கள் அத்தனையும் அவன் கெட்டிக்காரன் என்றும் முன்னுக்கு வரக்கூடியவன் என்றும், பொறுப்புமிக்கவன் என்றும் சான்று பகரக் கூடியவையாக அமைந்தன.

சாரதா தன் மைத்துனன் அஜீத்தின் உதவியோடு டிராக்டர் ஏஜென்ஸி ஒன்று தொடங்கியிருந்தாள். அவள் கணவர் லண்டன் போன பிறகு பரஸ்பர சண்டை காரணமாக அது நின்று போயிருந்தது. அநூப்பின் வருங்காலத்துக்கு ஒரு வழி செய்வதற்காகச் சாரதா அந்த ஏஜென்ஸியை அநூப்பின் பெயருக்கு மாற்றி யிருந்தாள். அதைப்பற்றித்தான் அவன் சாரதாவிடம் அப்படி அளந்து விட்டுக் கொண்டிருந்தான். தன் ஆசைக் கனவை அவள் நிறைவேற்றி வைப்பாள் என்ற நைப்பாசையில்!

(தொடரும்)




''என் கணவருக்கு பிரேயின் வாஷ் பண்ணி அனுப்புப்பா! கல்யாணம் ஆன பிறகும் தம் அம்மா பேச்சுக்கே அடிமையாகிக் கிடக்கிறார்!''

# தலைமுறைத் தலைமுறையாக தாய்மார்கள் நம்பிக்கையுடன் தேர்ந்தெடுப்பது...







# ஜம்மியின் லிவர்க்யூர்

**நம்பகமான குடும்ப நிவாரணி**

ஆம். ஜம்மியின் லிவர்க்யூர் எழுபத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாக குடும்பத்-தலைவிகளால் போற்றி பாதுகாக்கப்படும் ஓர் நம்பகமான குடும்ப நிவாரணி. பாட்டிமார்களின் காலங்களிலிருந்து பயன்படுத்தப்பட்டு வரும் கைகண்ட மருந்து.

பரிசோதனைக்குட்பட்ட ஜம்மியின் லிவர்க்யூர்-ஈரல் குலைக்கட்டி மற்றும் பலவித காரணங்களால் ஏற்படும் ஈரல் சம்பந்தப்பட்ட எல்லாவிதமான வியாதிகளுக்கும் உடனடி நிவாரணமளிக்கும்.

தயாரிப்பாளர்கள் :

**ஜம்மி பார்மஸூட்டிகல்ஸ்**

சென்னை - 600026.

**ஜம்மியின் லிவர்க்யூர்-ஓர் ஒப்பற்ற குடும்ப நிவாரணி.**



Criterion JP 3191TM



# ஒரு பிடி அவல்

வம்பன்

பாகிஸ்தானைச் சேர்ந்த தம்பதியர் இருவருக்குத் தங்கள் பம்பாய் வாச காலம் முடிந்த கடைசி நாளன்று பாபி படம் பார்க்க வேண்டும் என்று தோன்றிவிட்டது. அதற்காக முழு தியேட்டருக்கும் வசூலாகும் கட்டணத்தைச் செலுத்தி அவர்கள் மட்டும் அந்தப் படத்தைப் பார்த்தனர்.

சினிமாப் பைத்தியம் எவ்வளவு தூரம் போகும் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

• • •

பஞ்சாப் அரசாங்கம், ''கட்டாய குடும்ப கட்டுப்பாடுத் திட்டம்'' கொண்டுவர இருப்பதாக பஞ்சாப் சுகாதார மந்திரி திரு பல்வீர் சிங் அறிவித்திருக்கிறார். குழந்தை பெறக் கூடிய வயதிலுள்ள எல்லா ஆண் பெண்களுக்கும் இக்கட்டாயத் திட்டம் அமல் படுத்தப்படுமாம்.

பஞ்சாபியர் சிறந்த போர்வீரர்கள்; நாட்டின் எல்லையில் நாட்டுக்குப் பாதுகாவலர்களாக வாழ்பவர்கள். அவர்கள் தொகையைக் குறைப்பது தேசப் பாதுகாப்புக்கு உகந்ததல்ல. அதுமட்டுமின்றி நிர்ப்பந்தத்தின் மூலம் அமல்படுத்தப்படும் திட்டங்கள் எதிர்பார்த்த பலனை விளைவிக்காமல் வேறு பல புதிய பிரச்னைகளைக் கிளப்பி விடுகின்றன என்பது அனுபவ உண்மை!

• • •

எர்னெஸ்ட் ஹெமிங்வே என்ற பிரசித்தி பெற்ற நாவலாசிரியருக்கும், இன்னொரு எழுத்தாளருக்கும் போட்டி ஏற்பட்டதாம்—யாருடைய மண்டை ரொம்ப உறுதியானது என்று. இந்தப் போட்டியில் ஹெமிங்வே தம்முடைய மண்டைதான் உறுதியானது என்று நிரூபிக்க ஒரு கனமான கைத்தடியைத் தமது மண்டையில் மோதி முறித்தாராம். இது உண்மைதானா என்று யாரோ ஒருவர் ஹெமிங்வேயிடம் கேட்க, அதற்கு ஹெமிங்வேயின் பதில்: ''கதை நன்றாக இருக்கிறதே, எப்படிப் பொய் என்று சொல்வது!''

• • •

குடிப் பழக்கம் பிரிட்டிஷ் மாதரிடையே அபரிமிதமாகப் பெருகி வருகிறதாம். மூன்றாண்டுகளில் குடிப்பழக்கமுள்ள பெண்களின் எண்ணிக்கை இரண்டு மடங்காகப் பெருகி விட்டதாம். எந்த நாட்டிலும் ஒழுக்கம், சீலம் என்பனவற்றை மாதர்கள்தான் கட்டிக் காப்பாற்றி வந்திருக்கிறார்கள் என்பதைப் பிரிட்டிஷ் பெண்மணிகள் நினைவு கூரட்டும்.



• • •

கருணாநிதியும், ஸ்தாபனக் காங்கிரஸ் தலைவர் ராமச்சந்திரனும் மறைமுகமாக இணைந்து செயல்பட்டு வருகிறார்கள் என்று குற்றம் சாட்டி வருகிறார்கள். சென்ற தேர்தலின் போது புது காங்கிரஸ் — தி. மு. க.வுடன் சேர்ந்து செயல்படவில்லையா? புது காங்கிரஸ் அன்று செய்தது நியாயமெனில் இன்று அதையே ஸ்தாபன காங்கிரஸ் செய்யுமாகில் நியாயமில்லாமல் போய்விடாது. ஆனால் காமராஜ் சிலை திறப்பு விழாவுக்கு வந்த முதல்வர், பி. ராமச்சந்திரனும் தாமும் ''இதுவரை ஒன்றாகவில்லை'' என்று திட்டவட்டமாகக் கூறியிருப்பது பலருடைய சந்தேகத்தைப் போக்கும்.

• • •

ருஷ்யாவில் சென்ற ஆண்டின் அறுவடை மிக மிகக் குறைவாம். சென்ற பத்து ஆண்டுகளில் சென்ற ஆண்டைப் போல் குறைந்த அறுவடை மகசூல் எப்போதுமே ஆனதில்லையாம். திட்டமிட்ட இலக்கில், மூன்றில் இரண்டு பங்குதான் கிடைத்திருக்கிறதாம். ஆகவே அடுத்த ஐந்தாண்டுகளுக்கு (1976-80) ரொட்டி விநியோகத்தைத் தடுக்க அரசாங்கம் பல வகைகளில் தீவிர முயற்சி எடுத்து வருகிறது.

ஆனாலும் ருஷ்யத் தலைவர்களோ மக்களோ ரொம்பக் கவலைப்பட மாட்டார்கள். அமெரிக்கா எதற்கு இருக்கிறதாம்?

• • •

அமெரிக்காவை விட இந்தியாவில் அதிகமான பெண்கள் வைத்தியப் படிப்புப் படித்து டாக்டர்களாகிறார்கள்! 1970ம் ஆண்டு 10,407 பேர் டாக்டர் பட்டம் பெற்றிருக்கிறார்கள். அவர்களில் 26 சதவிகிதம் பேர் பெண்கள். அதே ஆண்டு அமெரிக்காவில் மொத்த வைத்தியப் படிப்பு படித்துப் பட்டம் பெற்றவர்கள் 8367 பேர். இவர்களில் பெண்கள் 700 பேர்தான். அதாவது 8.4 சதவிகிதம்தான். ஆனால் 1972ல் இந்தியாவில் டாக்டர் பட்டம் பெறும் பெண்களின் சதவிகிதம் குறைந்துவிட்டது. 21 சதம்தான்.

• • •

டாக்டர்களுக்குப் புரியாத புதிராக விளங்குகிறார் நியூஜிலாந்து நாட்டைச்சேர்ந்த ஜாக் பாஸ்டர். அவர் அப்படிப் புதிராக விளங்குவதற்குக் காரணம் 26 மைல் நீள ஓட்டப் பந்தயத்தில், இவரைவிட வயதில் எவ்வளவோ இளைஞர்களானவர்கள் ஏற்படுத்திய ரிகார்டுகளை யெல்லாம் வென்று விட்டதுதான்! இந்தத் தூரத்தை 2 மணி 17 நிமிஷம் 24 விநாடிகளில் முடித்திருக்கிறார். இவர் ஓர் ஆபீஸ் குமாஸ்தா.




நண்பர் நாகுவைப் பார்க்கப் போனபோது அவர் மிகவும் அக்கறையாக எழுதிக்கொண்டிருந்தார், ஒரு தடிமனான நோட்டுப் புத்தகத்தில்.

என் முகத்தில் தோன்றிய கேள்விக் குறியைப் பார்த்துவிட்டு அவரே சொன்னார்: ''ஒன்றுமில்லை. பத்திரிகைகளில் நல்ல நல்ல வீட்டுக் குறிப்புக்களை வெளியிடுகிறார்கள் அவைகளையெல்லாம் நான் அவ்வப்போது எழுதி வைத்துவிடுவேன்.''

அவர் நோட்டுப் புத்தகத்தை வாங்கிப் பார்த்தேன்.




☐ மின்சார பில் அதிகம் ஆகிறதே என்று கவலைப் படுகிறீர்களா? ஓர் அறையில் நான்கு பக்கச் சுவர்கள், கூரை ஆகிய எல்லாவற்றையும் மறைக்கும் அளவுக்குப் பெரிய பெரிய கண்ணாடியை வாங்கிப் பொருத்துங்கள். 15 வாட் பல்பு போட்டாலும் அறை ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும். இதனால் மாதம் இரண்டரை ரூபாய்க்குமேல் தாராளமாக மிச்சமாகும்.

☐ சுவரில் காரை உதிர்ந்து விடுகிறது. அறையே பார்ப்பதற்கு விகாரமாக இருக்கிறதா? இதற்குச் சுலபமான வழி: அறை பூராவும் காலண்டரை மாட்டுங்கள். 1950ம் வருட காலண்டர்கள் மிகவும் நயமாகக் கிடைக்கிறது, மூர் மார்க்கெட்டில்.

☐ தோசை வார்க்கும்போது கல்லில் தோசை ஒட்டிக் கொள்ளாதிருக்க வழி. தோசை வார்க்கும் முன்பு முழு ஆப்பிளை இரண்டாக வெட்டிக் கல்லில் தேய்க்க வேண்டும். முக்கிய குறிப்பு: ஒரு தடவை தேய்த்த ஆப்பிளை இரண்டாவது தடவை உபயோகிக்கக் கூடாது.

☐ மனைவிக்கு முதுகுப் பிடிப்பு வந்துவிட்டால், ''அடியே, கிளம்பு. புடவைக் கடைக்குப் போகலாம்'' என்று சொன்னால் போதும். வலி போய்விடும்.

☐ அழுக்குக் காலுடன் வந்து வீட்டில் உள்ள கம்பளம், தரை விரிப்புகளைக் குழந்தைகள் பாழ் செய்வதைத் தடுக்க வழி: வீட்டுக்குள் வந்ததும் கையால் நடக்கும்படி குழந்தைகளைப் பழக்கிவிட வேண்டும்!

☐ சர்க்கரை டப்பாவுக்கு எறும்பு வருவதைத் தடுக்க என் அம்மா கையாளும் வழி இதுதான்: டப்பாவின் மேல் 'மிளகாய்ப் பொடி' என்று எழுதினால் போதும். அமெரிக்காவில் இந்த வழியைக் கையாளுவதாக 'உமன் அண்டு ஹோம்' போட்டிருக்கிறது. ஆனால் அங்கு மிளகாய்ப் பொடி என்று எழுத மாட்டார்கள். 'சில்லி பௌடர்' என்று ஆங்கிலத்தில் எழுதுவார்களாம்!

☐ ஐந்தாறு பேர்கள் உள்ள வீட்டில் நிறைய செருப்பு ஜோடிகள் இருக்கும். இவைகள் அறை மூலையை அடைத்துக் கொள்ளும். பார்ப்பதற்கு அழகாக இருக்காது அறை. இப்படிச் செருப்புகளினால் அழகு கெட்டுப் போவதைத் தடுக்கச் சுலபமான வழி: வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் பூட்ஸ் போட்டுக் கொள்ள ஆரம்பிக்கலாம்.

☐ பொழுது விடிந்தால், பிச்சைக்காரர்கள் வீட்டு வாயிலில் வந்து கத்துகிறார்கள். இதற்கு என்ன உபாயம்? வீட்டு வாயிலைப் பின்பக்கமாக — அதாவது புறக்கடைப் பக்கம் — வைத்துக் கட்டிவிடலாம்.

☐ பத்திரிகைகளை இரவல் கொடுத்துக் கொடுத்து ஓய்ந்து போகிறீர்களா? ஓசிப் பத்திரிகை வழக்கத்தைத் தடுக்க என் தாத்தா கடைப்பிடித்த வழி இதுதான்: 'ஞானானந்த தீபிகை', 'புதைபொருள் ஆராய்ச்சி', 'தத்துவார்த்த ஜோதி' 'பிரம்ம விபி' போன்ற சஞ்சிகைகளுக்கு மட்டும் சந்தாதாராகச் சேர்ந்தது!


Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# சத்துமிகுந்த, சுவையான
# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்




## வளரும் குழந்தைகளுக்கு
## சுவையான துணை

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.

பிரிட்டானியா

**பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை**

லின்டாஸ்-BBC.GLX 6-140 TM

